# சொல்வயல்

## திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம்　　நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN ):978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 4 விளைச்சல் : 38 திருவள்ளுவர் ஆண்டு 2054 சூலை –2023

உள்ளே...











# கட்டடக் கட்டமைப்புத் துறைக் கலைச்சொற்கள்

| | |
|---|---|
| Architectural wing | – கட்டடக் கலைப் பிரிவு |
| Anti skid tiles | – வழுக்காத தரை ஓடுகள் |
| Arising report | – கட்டடக்காலி எழு அறிக்கை |
| Brackets | – தாங்கிகள் |
| Chief architect | – தலைமைக் கட்டடக் கலைஞர் |
| Chief engineer | – தலைமைப் பொறியாளர் |
| Chief tenant | – தலைமைக் குடியிருப்பவர் |
| Circuit houses | – சுற்றுலா மாளிகை |
| Construction & Maintenance wing | – கட்டுமானம் (ம) பராமரிப்புப் பிரிவு |
| Floor plan | – தரைத் திட்டம் |
| Handover possession | – உடைமையை ஒப்படை |
| Inspection of building | – கட்டட ஆய்வு |
| Irrigation structure | – பாசனக் கட்டமைப்பு |
| Mahila court buildings | – மகளிர் நீதிமன்றக் கட்டடங்கள் |
| Meticulous planning | – துல்லியத் திட்டமிடல் |
| Monuments | – நினைவகங்கள் |
| National building code | – தேசியக் கட்டடக் குறியீடு |
| Post–disaster | – பேரிடருக்குப் பின் |
| Pre–disaster | – பேரிடருக்குப் பின் |
| Private lease | – தனியார் குத்தகை |
| Quality control wing | – தரக்கட்டுப்பாட்டுப் பிரிவு |
| Rent control | – வாடகைக் கட்டுப்பாடு |
| Allotment proceeding | – ஒதுக்கீட்டாணை |
| Technical guidance | – தொழில்நுட்ப வழிகாட்டல் |
| Warehouses | – பாதுகாப்புக் கிடங்குகள் |

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

திருவள்ளுவர் ஆண்டு 2054 ஆடவை (ஆனி)

சூலை – 2023

| | | |
|---|---|---|
| ஆசிரியர் | : | முனைவர் கோ.விசயராகவன் இயக்குநர் |
| பொறுப்பாசிரியர் | : | முனைவர் வே. கார்த்திக் |
| இதழ்க்குழு | : | திரு. கி. இராமர்<br>திரு. ஏ. காந்தி<br>திருமதி. க. கஸ்தூரி |



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN):978-81-958032-0-0

# அறிவியல் தமிழை வளர்ப்போம்!

அறிவியல் என்பது தனிப்பட்ட மனிதருக்கோ அல்லது நாட்டிற்கோ உரியது அன்று. அது உலகம் முழுமைக்குமானது. உலகத்தோடு ஒன்றி வாழ வேண்டிய நமக்குத் தாய்மொழிவழிக் கல்வி இன்றியமையாததாகிறது. தாய்மொழியின் மூலம் பயின்று அதனால் கிடைக்கும் சிந்தனைகள் சிறப்பானவையாக இருக்கும். வாழ்வியலில் அறிவியல் இணைந்தே பயணிக்கும். ஏட்டறிவு பெறாதோர்கூட தம் தாய்மொழியில் வழங்கப்படும் குறிப்புகளை நன்கு அறிந்து கொள்கின்றனர். இன்றும் வளர்ச்சியடைந்த நாடுகளைச் சான்றாகக் கொண்டால் அந்நாடுகளிலெல்லாம் அவரவர் தாய்மொழியிலேயே அனைத்தும் கற்பிக்கப்படுகிறது.

அறிவியல்தமிழ் மொழியையும், தமிழ் மொழியில் இடம் பெறும் அறிவியல் தொடர்பான செயற்பாடுகளையும் ஒருங்கே சுட்டுகின்றது. தமிழ் மொழியில் அறிவியல் செயற்பாடுகள் தொன்றுதொட்டுச் சிறப்புற்று இருந்ததை அனைவரும் அறிவோம். அறிவியல் தமிழ் இக்காலத்தில் அறிவியல் செயற்பாடுகளைச் செம்மையாகக் குறிக்கிறது. தமிழை மொழியாகக் கொண்டவர்கள் அறிவியல் தொழில்நுட்பங்களைத் தமிழில் படிக்கையில் ஒரு நற்சிந்தனைக்கு வழிசெய்கின்றது. புதிய பரிமாணங்களில் மாறுபட்ட சூழலில் செய்திகளை ஆராய வழிசெய்கின்றது. ஆங்கில உலகால் புறக்கணிக்கப்பட்ட துறைசார் செய்திகளை ஆராயவும் அறிவியல் தமிழ் தேவை.

தமிழரின் வரலாறு, பண்பாடு, சமயம், சமூகம், பொருளாதாரம், அரசியல் போன்ற பன்முகத் தேடல்களுக்கு அறிவியல்தமிழ் உதவும். தொழில்நுட்பப் பயன்பாட்டுக்கும், மனிதர்களுக்கும் இடையேயான நெருக்கத்தைத் தாய்மொழிதான் நல்குகிறது. அறிவில் தொழில்நுட்பத்தை அடிப்படையாகக் கொண்டு விளங்கும் இக்காலத்தில் அவரவர் மொழியில் கையாள்வது போல் நாமும் அன்னைத் தமிழாம் அருந்தமிழில் கையாளுவதே சிறந்ததாகும். ஓர் இனம் தலைமுறை தலைமுறையாகக் கண்ட வளர்ச்சியை அடுத்த தலைமுறைக்கு மொழி மூலம்தான் கொண்டு செல்ல முடியும். தமிழின் வளர்ச்சியையும் அறிவியல் தமிழ் வளர்ச்சியையும் ஒரே நேர்க்கோட்டில் நோக்குவதே சரியானது. அறிவியல் தொழில்நுட்பங்களைத் தமிழில் படைத்தளித்தலே அறிவியல் தமிழாகச் சுட்டப்படுகிறது. ஒரு மொழியின் வளர்ச்சி என்பது அம்மொழி ஏற்றுக்கொள்கின்ற பிற துறைகளின் தொடர்புடனும் அமைகிறது.

அறிவியல் தமிழாக்கத்தில் கலைச்சொல்லாக்கம் முகாமையான பங்கு வகிக்கிறது. இயல்பாக வழக்கிலுள்ள சொற்களைக் காட்டிலும் அவை சிறப்புப் பொருளைத் தருகின்றன. அறிவியல் தமிழ் வளர்ச்சிக்கு ஊக்கமளிப்பதாய் உள்ளது. கலைச்சொற்களை உருவாக்குவதில் அறிவியல் தேர்ச்சி மட்டும் போதாது. நல்ல மொழியறிவும் கட்டாயமாகும். அப்போதுதான் சொற்களின் அமைப்பும் நடையும் சிறப்பாக இருக்கும். அறிவியல் தமிழ் என்பது பல்துறைத் தொகுப்பாகும். கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், பயிரியல் (தாவரவியல்), பொறியியல், மருத்துவம் எனப் பலவும் இதில் அடங்கும். எனவே, அறிவியல் நூல்களைப் படைத்தல் என்பது இலக்கியம் படைத்தலுக்குச் சமமாகும்.

தமிழுக்கு அறிவியல் புதிதல்ல. சங்க காலத்திலேயே தமிழில் அறிவியல் இருந்ததுண்டு. அதைத் தனியாக அறிவியல் தமிழ் என்று பிரித்திடாமல் அறிவியலையும் அழியாத் தமிழாய்க் கண்டவர்கள் நம் முன்னோர்கள். வளர்ந்த நாடுகள் எல்லாம் செயற்கைக்கோளை விண்ணில் செலுத்தி ஆராய்ந்து கூறியவைகளை மனக்கண்களால் ஆராய்ந்து கூறியவன் சங்கத் தமிழன். வானை உற்று நோக்கி நாள்மீன், கோள் மீன் என்றான். வெள்ளி வடதிசை சென்றால் மழை வரும்.

தெற்கு ஏகினால் மழையின்றி வற்கடம் ஏற்படும் என்றான்.

"நீனிற விசும்பின் வலனேர்பு திரிதரு
நாண்மீன் விராய கோள்மீன் போல"
(பட்டினப்பாலை)

"செஞ்ஞாயிற்றுச் செலவும்
அஞ் ஞாயிற்றுப் பரிப்பும்
பரிப்பு சூழ்ந்த மண்டிலமும்" (புறம்)

இந்த புறநானூற்றுப் பாடலிலே உறையூர் முதுகண்ணன் எனும் புலவர் கூறும் கருத்து இன்றைய அறிவியல் உலகையே புரட்டிப் போடுகிறது. சரி... அது என்ன? சூரியன் ஒரு குறிப்பிட்ட பாதையில் சுற்றி வருகிறது. அது கடக்கும் தொலைவு, அதன் வேகம் பற்றி கூறுகிறார். மேலும் வான்வெளியில் ஒரு குறிப்பிட்ட எல்லைக்கு மேல் காற்றே இல்லாத அண்டவெளி உண்டென அவரால் எப்படிக் கூற முடிந்தது!. இதுதான் அறிவியல் தமிழ்.

இன்று அறிவியல் தொழில்நுட்பத்தின் உச்சத்தைத் தொட்ட நாளில்தான் ஆளில்லா செயற்கைக்கோள் ஆட்சி செலுத்துகிறது. ஆனால், இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, "வலவன் ஏவா வானூர்தி எய்துவ" என்றானே அது எப்படி இயன்றது!. புறக்கட்டளை ஏற்று, தாமே இயங்கும் விண்கலம் என்கிறது புறநானூறு, அறிவியல் துறை அன்றும் இன்றும் நாம் ஆழங்கால்பட்ட துறைதான். ஆனால், இன்று அறிவியலும் ஆங்கிலமும் தோழமையாய்ப் பயணித்துத் தமிழைச் சற்றே புறந்தள்ளியுள்ளது.

அறிவியலுக்கு ஆங்கிலத்தில்தான் பொருத்தமான சொற்கள் உள்ளன என்பது தவறு. காரண காரியத் தொடர்புடன் பொருத்தமான தமிழ்ச் சொற்கள் துறைதோறும் புழங்க தமிழாய்ந்த அறிஞர்களால் சீர்மை செய்யப்பெற்று வழங்கப்பட்டுள்ளன.

### சான்றாகச் சில சொற்கள்

| | | |
|---|---|---|
| Skype | – | காயலை |
| Hotspot | – | பகிரலை |
| Instagram | – | படவரி |
| Star | – | உடு |
| Missile | – | ஏவுகணை |
| Lence | – | உருப்பெருக்கி |
| 3D | – | முத்திரட்சி |
| Remote | – | தொலையியக்கி |

### சொல்வயல் சொற்கள்

| | | |
|---|---|---|
| Buck Scrapper | – | மண்வாரி |
| Scrapper | – | மண் சமனி |
| Electrotherapy | – | மின் மருத்துவம் |
| Haemangioma | – | குருதிநாளப் புற்று |
| Balneotherapy | – | நீராட்டு மருத்துவம் |
| Chiropractor | – | நீவு மருத்துவம் |
| Printing regulator | – | அச்சு சீரியக்கி |
| Share transfer | – | பங்குமாற்றம் |
| Export market | – | ஏற்றுமதி அங்காடி |
| Data circuit | – | தரவு மின்சுற்று |
| Data dictionary | – | தரவு அகரமுதலி |
| Radiator | – | குளிர்ப்பி |
| Spring Leaf | – | வில்பட்டை |
| Clutch | – | வேகமாற்றி |

அறிவியல் தமிழின் பயன் எல்லோரையும் சென்றடைய வேண்டும் எனில் அதற்கான சொற்கள் பல்லூடகத்தில் தொடங்கி மக்கள் தொலைத் தொடர்பு கருவிகள் வரை பயன்பாட்டுக்கு வர வேண்டும். அறிவியல் தமிழின் தந்தை என்றறியப்படும் அறிஞர் மணவை முஸ்தபா அவர்கள் ஒரு பல்கலைக்கழகம் செய்ய வேண்டிய பணியைத் தனியொருவராகச் செய்து அறிவியல் தமிழ்க் கலைச்சொற்கள் வெளியிட்டார். அவரைப் போன்ற ஏராளமான அறிஞர்கள் தம் பணியைத் தொடர்ந்து செய்து வருகின்றனர். அறிவியல் தமிழ்ச் சொற்களை அச்சில் மட்டும் கொள்ளாமல் பயன்பாட்டில் கொள்வது நம் ஒவ்வொருவரின் கடப்பாடாகும். நிற்க.,

இவ்வியக்ககம் செயற்படுத்திவருகிற கலைச்சொல்லாக்கம் உள்ளிட்ட மொழிக்காப்புப் பணிகளுக்குத் துணைநிற்கும் அகராதியியலாளர்கள், சொல்லாக்க வல்லுநர்கள், மொழியியலாளர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள்,ஆய்வாளர்கள், மாணவர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் இவ்வியக்ககத்தின் சார்பில் நன்றி நவில்கிறேன்.

அகராதியியல் அறிஞர் முனைவர் ச.சச்சிதானந்தம் அவர்களின், "பிரெஞ்சு நாட்டில் தமிழ்மொழியின் வளர்ச்சி நிலைப்பாடுகள் – பன்னோக்கு வரலாற்றுக்கள ஆய்வு (பகுதி 2 – இந்தியத் தமிழர், இலங்கைத் தமிழர் வளர்த்த தமிழ்)" என்னும் பொருண்மையிலான கட்டுரையும், மலேசியத் தமிழ்நெறிக் கழகத்தின் தேசியத் தலைவர் திரு. இரா. திருமாவளவன் அவர்களின், "மறை

சொல்லும் மறுப்பும் மறைப்பும்" என்னும் கட்டுரையும், பட்டதாரி ஆசிரியர் திரு. அண்டனூர் சுரா அவர்களின், "அரிமளம், அரிமழமாகிப் போன அரிமணம்" எனும் கட்டுரையும் இம்மாதச் "சொல்வயல்" மின்னிதழுக்கு அணிசேர்க்கின்றன. அப்பெருந்தகைகளுக்கு மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இவ்வியக்ககம் நெறிப்படுத்தும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகளில் பங்கேற்றுத் தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றிய பலதுறை சார்ந்த அனைத்துத் தமிழுள்ளங்களுக்கும், என் உள்ளார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன். 90 ஆவது அமர்வில் வாழ்த்துரை வழங்கிச் சிறப்பித்த காரைக்குடி, அழகப்பா பல்கலைக்கழக மேனாள் துணைவேந்தர் பேரா. முனைவர் சொ. சுப்பையா அவர்களுக்கும், அகராதியியல் அறிஞர் பேரா முனைவர் ச. சச்சிதானந்தம் அவர்களுக்கும் என் அன்பு நன்றிகள்.

பயிலரங்கங்களுக்கான தொழில்நுட்ப ஒருங்கிணைப்பைச் செய்துவரும் சென்னை வேல்சு அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களுக்கும் அகம்நிறை அன்பு நன்றியை உரித்தாக்குகிறேன்.

தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒருங்கிணைந்து செயலாற்றுவோம்...

செயலால் பேசுவோம்...

## மயங்கொலிச் சொற்கள்

**கண்ணி**

1.பூமாலை 2.பூங்கொத்து 3. கூடும்பூமாலை
4. தலைமாலை 5.போர்ப்பூ 6.புட்படுக்கும் முடிப்புக் கயிறு
7. பூட்டாங்கயிறு 8.ஓர் இசைப்பாட்டு 9. கரிசலாங்கண்ணி.

1. "கண்ணியந்தாரு மெண்ணிராண்டே" (தொல்.பொருள். 634)
2. "புன்னை மெல்லிணர்க்கண்ணிமிலைந்தமைந்தர்" (புறநா. 24:8)
3. "சுரும்பார்கண்ணிப் பெரும்புகன்மறவர்" (மதுரைக்.596)

**கன்னி**

1.மணமாகாதபெண் 2. இளமை 3.புதுமை 4. பெண்
5.தவப்பெண் 6.துர்க்கை 7.பார்வதி 8.குமரியாறு 9.கன்னிராசி
10. புரட்டாசி 11.காக்கணங்கொடி.

"கன்னிதன்னைப்புணர்ந்தாலும் "(சிலப்.7. கானல்வரி ஆற்றுவரி)

"கன்னிநீலக்கட்கன்னி" (சீவக. 900)

"கன்னிசெங்கோட்டம்"(கல்லா. 58)

# பிரெஞ்சு நாட்டில் தமிழ்மொழியின் வளர்ச்சி நிலைப்பாடுகள் பன்னோக்கு வரலாற்றுக்கள ஆய்வு



## பகுதி 2 – இந்தியத் தமிழர், இலங்கைத் தமிழர் வளர்த்த தமிழ்

முனைவர் பேரா. ச.சச்சிதானந்தம்
இயக்குநர் பன்னாட்டு உயர்(கல்வி) தமிழாய்வு நிறுவனம், பாரிசு

பாரிஸ் லூவர் அருங்காட்சியகத்தில் உள்ள, 'தன்னை நோக்கும் எவரையும் பதிலுக்கு வைத்தவிழி வாங்காமல் புன்முறுவலுடன் நோக்கும் தன்மையுடைய மோனாலிசா' ஓவியம் போல், வந்தாரை வாழவைக்கும் தமிழகம் போல், தன் மண்ணுக்கு வரும் மொழிகளை வரவேற்கின்ற விருந்தோம்பும் பண்பு உடையது கோல் மண்! (la Gaule பிரான்சின் ஆதிப்பெயர்). தமிழர்கள் வாழ்வை மேம்படுத்திக்கொள்வதற்காகவும், பாதுகாப்பானதாக ஆக்கிக்கொள்வதற்காகவும் தாய்நாட்டை விட்டு, இந்நாட்டுக்கு வந்து, வசந்தம் கண்டு வாழ்கின்றனர். பிரான்சில் தமிழர் குடியேறும் முன்னரும், குடியேறிய பின்னரும் தமிழின் இருப்பை ஊன்றி அதன் அருமையை வளப்படுத்திக் கொண்டேவருகின்றனர் பிரெஞ்சியர்! அவர்களின் பெறுமதிமிகு பங்களிப்புகள் தமிழ் மொழியின் வளர்ச்சி நிலைப்பாடுகள் ஆழ்ந்தூன்றி, ஆளுமையான சான்றாக விளங்குகின்றன. பிரான்சில் தமிழ் வளரும் வரலாற்றில் பிரெஞ்சியருக்குத் தார்மீகப்பாங்கு நிலவுவது போல, தமிழர்களுக்கும் ஆத்மார்த்தப்பங்கு உலவுகிறது.

பிரான்சில் தமிழர்கள் எனும்போது, அது பிரான்சு நாட்டுக்கு 1967– 68இன் காலப்பகுதியில், முன்வந்த புதுச்சேரித் தமிழரையும், அடுத்து, 1978–79இன் காலப்பகுதியில் பின்வந்த இலங்கைத் தமிழரையும் குறித்து நிற்கும். பொதுவில் புதுச்சேரியர் பிரெஞ்சுக் குடியுரிமையுடன் நல்வாழ்வு நாடியும், இலங்கையர் அரசியல் அகதி என சரணாலயம் தேடியும் படியேறினர். இருதமிழர்களும் திரை கடலோடியும் திரவியம் தேடி, வாழ்வை வளப்படுத்த வந்தவர்கள் என்பதுதான் மெய்மை. இந்நன்னாட்டில் இந்தியத்தமிழர்களும் இலங்கைத்தமிழர்களும் தமிழ்வளர்ச்சிக்குத் தனித்தனியே தந்தம் வழியில் இயங்கி வருகின்றனர். இரு நாட்டுத்தமிழர்களின் தமிழ்தொடர்பான செயற்பாடுகளை மையப்படுத்தி சரித உண்மைகளைக் களஆய்வு செய்கின்றது இக்கட்டுரை.

### பாண்டிச்சேரித் தமிழர்

பிரான்சில் இந்தியத்தமிழர்கள் என்றால், அது பெரும்பாலும் புதுச்சேரி, காரைக்கால் மக்களையே சுட்டி நிற்கின்றது. புதுக்கோட்டை, சிதம்பரம் நீடூர் மற்றும் இளையான்குடியிலிருந்து வந்தவர்களும் விரல்விட்டு எண்ணக்கூடிய தொகையில் காணப்படுகின்றனர். 280 ஆண்டுகளுக்கு மேலாகப் பாண்டிச்சேரியை ஆண்டுவந்த பிரெஞ்சியர், பாண்டிச்சேரி மாநிலத்தினை இந்தியாவுக்கு உத்தியோக பூர்வமாகக் கையளித்த 28.05.1956 நாளிலிருந்து, முறையே 1956, 1962, 1968 ஆகிய மூன்றுகாலப் பகுதிகளில் புதுச்சேரியிலிருந்தும் காரைக்காலிலிருந்தும் பிரான்சில் குடியேறினர். இவ்வாறு குடியேறிய பாண்டிச்சேரியினர் மூன்று வகையினர். சிப்பாய்களாக–ஸோல்டா (Soldats) வந்தவர்களும், பிரெஞ்சு உயர் கல்லூரிக்கல்வி கற்று (Lycée français) பல்கலைக்கழக மாணவர்களாக வந்தவர்களும், உயர்தொழில் தேடுவதற்காக வந்தவர்களும் இதில் அடங்குவர். பிரெஞ்சுக் குடியுரிமை உடையவர்களைத் திருமணம் செய்தோ, பெற்றோர்கள் பெற்ற பிரெஞ்சுக்குடியுரிமையைக் காட்டியோ 'உடைஞ்சபிரெஞ்சு' பேசத் தெரிந்த புதுச்சேரியர்களும் வந்தனர். இலங்கைத் தமிழர் அடையாளஅட்டை, கடவுச்சீட்டு ஆகியவற்றை விலைக்கு வாங்கி இலங்கை அகதி என

பிரான்ஸ் வந்த இந்தியத்தமிழர்களும் உண்டு. இவ்விரு சாராரும் பிரெஞ்சு பெரிதாகக் கற்றவர்களோ அல்லது உயர்கல்லூரிக்கல்வியோ பெற்றவர்களோ அல்லர்.

## இலங்கைத் தமிழர்

இலங்கைத்தமிழர்கள் 1970–1980, 1980–1983, 1990–2000 என மூன்று காலப்பகுதிகளில் நாட்டில் ஏற்பட்ட உள்நாட்டுப்போரில் உயிர்களைக் காப்பாற்றிக் கொள்வதற்காகப் பிரான்சுக்குள் அகதிகளாகப் பிரெஞ்சுமொழி அரிச்சுவடியே அறியாமல் வந்து சேர்ந்தனர். இலங்கையர்கள் பிரான்சுக்கு வர முன்னராகவே, இலங்கைக்குப் பிரெஞ்சியர் 1672இல் தளபதி Blanquet de la Hayeயின் ஆணைப்படி 14 கப்பல்களில் திருகோணமலை கொட்டியர் துறைமுகம் வந்திறங்கினர். வந்து தங்கியவர்களில் பலர் மலேரியாக்காய்ச்சல் நோய்வாய்ப்பட்டதில் பலர் கொத்துக்கொத்தாய் மடிந்துபோயினர், மிஞ்சியவர்கள் தாக்குப்பிடிக்க முடியாமல் தென்னிந்தியா நோக்கிச் சென்றுவிட்டனர்.

## பிரான்சு வாழ் பாண்டிச்சேரித் தமிழர்கள் ஆற்றும் தமிழ்ப்பணி

பிரெஞ்சு கற்றவர்கள், உத்தியோகம் தேடிக்கொண்டவர்கள் பிரெஞ்சுக்காரராகத் தம்மை மாற்றிக் கொண்டு, தமிழிலிருந்து விலகிக்கொண்டனர். இதற்கு மறுதலையானவர்கள் தமிழ் பேசினர். தமிழ், பண்பாடு பற்றி யோசித்தனர். இவர்களால் தமிழ் வாழ்ந்தது, பாரிசில் மூன்றாவது உலகத் தமிழாராய்ச்சி மாநாடு 1970இல் தனிநாயகம் அடிகளால் ஏற்பாடு செய்யப்பட்டது. பிரான்ஸ் சார்பாகத் துணை நின்றவர் பேரா. ஃபில்லியொசா (J.Filliozat) அவர்கள். அடிகளாருக்கு உதவியாக இருந்த தமிழர் பாரிஸ்ஜமால் என்ற ஜமாலுதீன் ஆவார்.

இம்மாநாடு முடிந்த பின்னர், திருவாளர்கள் ஜமாலுதீன், பக்தா, நசீர், நாசர், தசரதன், பஸ்கால், முதியப்பநாதன் ஆகியோர் இணைந்து தமிழ்மாணவர் மன்றம் என்ற சங்கத்தை உருவாக்கினர். இது பின்னாளில் பிரான்ஸ் தமிழ்ச்சங்கம் என்று பெயர்மாறியது. இதே காலப்பகுதியில் திரு.வில்பிரான்ஸின் பாரிஸ் தமிழ்ச்சங்கமும் இருந்திருக்கின்றது. 1974–76களில் இவ்விருசங்கங்களுடன் இன்னுமொரு சங்கமும் வாரவிடுமுறைகளில் குறிப்பிட்ட படமாளிகைகளில் தமிழ்த்திரைப்படங்களைக் காட்டிவந்தனர். படஇடைவேளைகளின் போது தமிழ் மளிகைப்பொருட்கள் விற்பனையும் இடம்பெற்றது. திரு.மு.நசீம், 'இலண்டன் முரசு' பத்திரிகை திரு.சதானந்தன் அவர்களுடனும் கூட்டாகப் படப்பெட்டிகளைப் பாரிசுக்கு எடுத்துவந்து படம்காட்டி வந்தார். திரைப்படம் காண்பிக்கும் நிகழ்வானது, பாரிசில் தமிழர்களுக்கு முதற்தமிழ்ப் பொது நிகழ்வாகவும் அதேசமயம் தமிழர் சந்திப்பு மையமாகவும் உருவாக வித்திட்டது.

கம்பன்கழகம், திருவள்ளுவர் கலைக்கூடம், பிரான்ஸ் கண்ணதாசன் கழகம், தமிழ்க் கலாச்சார மன்றம், உலகத்தமிழ்ப் பண்பாட்டுஇயக்ககம், பாரிசு பாண்டிச்சேரி அசோசியேஷன், அதிஸ்மொன் தமிழ்ச் சங்கம், முத்தமிழ்ச் சங்கம், வாணிதாசன் சங்கம் எனப் பல தமிழ்ச்சங்கங்கள் உண்டு. இந்தியத்தமிழர்கள் தமிழ்ப்பணி செய்வதற்குச் சங்கங்களை வீட்டுமுகவரியில் பதிந்து, ஆண்டுதோறும் பொங்கல்விழா, ஆண்டுவிழா செய்து வருகின்றனர், உரை, பட்டிமன்றம், கவியரங்கம், நாட்டியம், ஆகிய நிகழ்ச்சிகள் விழாக்களில் இடம்பெறும். யாப்பிலக்கணம் கற்பிக்கும் கி.பாரதிதாசனின் கம்பன் கழகம் போன்ற சில சங்கங்கள் தமிழகத்து அறிஞர்களை அழைத்து ஆண்டுவிழாக்களில் உரையாற்ற வைப்பதும் உண்டு. இரண்டொரு சங்கங்கள் வாரத்தில் ஒருமுறை தமிழ்ப்பிள்ளைகளுக்கான தமிழ் வகுப்புகளை வைப்பர்.

இச்சங்கங்கள் சிலஇணைந்து முறையே 1982இல் பாரதியார் நூற்றாண்டுவிழா, 1992இல் பாவேந்தர் பாரதிதாசன் நூற்றாண்டு விழா, 2007இல் மகாகவி பாரதியார் 125ஆவது ஆண்டுவிழா, 2009இல் அறிஞர் அண்ணா நூற்றாண்டு விழா ஆகியவற்றை நடத்தியிருக்கின்றனர். இவ்விழாக்களின் போது நினைவுமலர்கள் புதுவையில் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டன. 1984களில் தமிழியக்கம் தேவ குமாரன் அடிப்படைத்தமிழ் கற்பதற்கு, 'J'apprends le tamoul'– நான் தமிழ் படிக்கிறேன்' எனும் நூலை அறிமுகம் செய்தார். பின்னர் 1986அளவில் திரு. ஜவியே என்பவர், தமிழகப்பத்திரிகைச் செய்திகளை வெட்டிஒட்டி, 'பாரிமலர்'எனும் சஞ்சிகையை

வெளியிட்டார். 1986இல், சார்செலில், புதுச்சேரிப் பிள்ளைகள் தமிழ்படிப்பதற்காக, 'தமிழா இல்லம்'என்ற முதற்தமிழ்ப்பள்ளியை, திரு.கருணாநிதி தொடங்கினார்.

1986இல்தமிழ் கற்பதற்கு, பேரா.அ.முருகையன் எழுதிய 'வணக்கம்'நூலை BPI Centre Pompidou வெளியிட்டது.1987இல், திரு.என்.தொரெசாமி 'Baradyar – Poéte tamoul' நூலை அச்சிட்டார். இவ்வாறே 1991இல், சுகிர்தராஜ்– ஜூலியா கவிஞர் கண்ணதாசனின் திரைப்பாடல்களை Kannadasane என பிரெஞ்சுநூலாக வெளிக்கொணர்ந்தார். ஆத்திசூடியை Edouard Ariel பிரெஞ்சாக்கம் செய்ததை 2001இல் திரு.கோபால கிச்சினன் கைநூலாகக் கொணர்ந்தார். கனவு மெய்ப்பட வேண்டும் சிறுகதைத் தொகுதியையும் சில பிரெஞ்சு மொழிபெயர்ப்புகளையும் திரு. நாகரத்தினம் கிருஷ்ணா அறிமுகம் செய்தார். திரு.ப.சண்முகசுந்தரம் பிரெஞ்சு – தமிழ் அகராதிகளையும், பிரெஞ்சு, தமிழ்கற்கும் இலக்கணங்களையும் நூலாக்கம் செய்தார். பின்னர், திரு. சக்திவேல், ஐந்துமொழி அகராதியையும், திரு.எச்.நாகராஜன் தற்கால அகராதி: பிரெஞ்சு– தமிழ் அகராதியையும் வெளியிட்டனர். 2006இல் எழுத்து இல்லாத தீர்ப்பு சிறுகதைத்தொகுப்பினை திரு. பாரிஸ் பார்த்தசாரதி எழுதினார். கவிஞர்.கி.பாரதிதாசன் சில கவிதைத் தொகுப்புகளையும், திருமதி கஸ்தூரிபாய், உரிமையை விரும்பாத உறவுகள், போகப் போகத் தெரியும், கம்பன் விருத்தத்தில் வைத்த விருந்து முதலான படைப்புகளையும் தந்தனர். தமிழ்ப் புத்தகசாலையையும் அமைத்து, இந்தியன் சிறப்பங்காடி, சாமினா வணிகம் என இரு பெரியகடைகளை இயக்கிவருகின்றார் தொழிலதிபர் திரு.மு நசீம். பிரான்சில் நடைபெறும் தமிழ் நிகழ்ச்சிகளுக்கு நிதியுதவி செய்துவருகின்றார் பாதிநூற்றாண்டுக்கு மேலாக வணிகம்செய்யும் '47 நாடகங்கள்' இல் நடித்த இத்தமிழர்!

## பிரான்சு வாழ் இலங்கைத்தமிழர்கள் ஆற்றும் தமிழ்ப்பணிகள்

பாரிசில் இடங்களை வாடகைக்கு எடுத்து மொழி, பரதநாட்டியம், குரலிசை, வீணை, 'மியூசன்' கல்விக்காகப் பாரிஸ் தமிழர் கல்வி நிலையம், ASCES பாட சாலை, கலாலயம், நர்த்தனாலயம், ஈஸ்வரி பாடசாலை, முதலான இலங்கையர் பள்ளிகள் வாரவிடுமுறை, புதன்கிழமைகளில் இயங்குகின்றன். *தமிழ்ச்சோலை, தமிழர் கல்வி மேம்பாட்டுப் பேரவை ஆகிய பள்ளிகள் விடுதலைப்புலி இயக்குபவை. மேற்கூறப்பட்ட பாடசாலைகள் அனைத்திலும் தமிழ்ப்பிள்ளைகளுக்குத் தமிழ் கற்பிக்கப்படுகின்றது.

*தமிழ்ச்சோலை என்ற தமிழ் கற்பிக்கும் பாடசாலை, தமிழீழம், தமிழர் தேசியம், என்றவற்றை தாரகமந்திரமாகக் கூறி, தமது ஈழமுரசு பத்திரிகை, IBCவானொலி, TTN தொலைக்காட்சி, கலைநிகழ்வுகள் என அனைத்து ஊடகங்கள் வழி உணர்ச்சி உண்டாக்கி பெருமளவு ஆட்களைச் சேர்த்தது. ஒவ்வோர் ஊரிலும் புலி ஆதரவாளர்களைக் கொண்டு நகரசபைகளில் இலவசமாக வாரத்தில் ஒருநாள் வகுப்பறைபெற்று, தமிழீழத்தமிழ் கற்பித்து வருகின்றது. தமிழீழத் தேசிய சேவை என்று பாடத்திட்டங்கள் அமைத்து, நூல்கள் பலவற்றை அச்சிட்டு வெளியிட்டு வருகிறது தமிழர் கல்வி மேம்பாட்டுப் பேரவை.

பிரான்சில் தமிழ் வளர்த்ததில் எழுத்தாளர்களுக்கும் பங்கு உண்டு. அவர்களில் மூத்தவர்களாக, திருவாளர்கள் எஸ்.அகஸ்தியர், ம.அரியநாயகம், வி.ரி.இளங்கோவன், கலைச்செல்வன். போன்றோர் இடம்பிடிக்கின்றனர். பன்முகம்கொண்ட திரு.அரியநாயகம் உலகத்தமிழ் நாடக விழாவையும் கலைஞர்களுடன்சேர்ந்து ஒழுங்குசெய்திருக்கின்றார். இலக்கிய ஈடுபாடுடைய, பத்திரிகை ஆசிரியர் இளங்கோவன் கவிதை, சிறுகதை, கட்டுரை, நாடகம் எனப் பலதொகுப்புகளையும், பத்மா இளங்கோவன் சிறுவர்களுக்காக மழலை, குழந்தை, பாப்பா, பிள்ளை என அனைவருக்குமான பாடல்களைத் தொகுத்திருக்கின்றார். இலங்கை எழுத்தாளர்களும் அவர்தம் படைப்புகளும் பின்வருமாறு :

**நாவல்கள் :** எரிநெருப்பில் இடைபாதை இல்லை – எஸ்.அகஸ்தியர், இச்சா – ஷோபாசக்தி, கடல் – அருந்ததி, ஆண்பால் உலகு, கொரில்லா–ஷோபாசக்தி.

**உணர்வூற்றுச்சித்திரம் :** உனக்குள்ளழியும் நீ – அகஸ்தியர்.

**விவரணச்சித்திரம்:** மானிட தரிசனங்கள்–அகஸ்தியர்

**சிறுகதைகள் :** மண்ணைத் தேடும் மனங்கள், தேசம் தாண்டிய நதிகள் –ம. அரியநாயகம். மேய்ப்பர்கள் அகஸ்தியர், இளங்கோவன் கதைகள், இப்படியுமா? –வி.ரி.இளங்கோவன். சுரங்கள்

மாறி – சிவலிங்கம் சிவபாலன், பொல்லாத மனிதர்கள், தீண்டத்தகாதவன் – சுகன், கொந்தல் மாங்காய் – வண்ணை தெய்வம். காம்பு ஒடிந்த மலர், ஒரு நியாயம் விழிக்கின்றது– தமிழ்ப்பிரியா. தனிக்கதை – கோமகன், Friday et Friday, தேசத்துரோகி, கண்டி வீரன், எம்.ஜி.ஆர் கொலை வழக்கு – ஷோபாசக்தி

**கவிதைகள் :** தூரத்து விடிவெள்ளி– L'Etoile de matin lointaine (இருமொழி)– ம.அரியநாயகம். கரும்பனைகள், சிகரம், ஒளிக்கீற்று– வி.ரி.இளங்கோவன். வானலைகளில் எங்கள் கவிதைகள்– வண்ணை தெய்வம், இனி ஒரு வைகறை, முகங்கொள், கனவின் மீதி, மிச்சமென்ன சொல்லுங்கப்பா – கி.பி. அரவிந்தன். இருள் மிதக்கும் பொய்கை – தர்மினி, வெளிச்சம் என் மரணகாலம் – நெற்கெழுதாசன், பொற் கனவுகள் – மஞ்சுளா

**நாடகம் :** அறுவடை, உடல்–ம.அரியநாயகம். யாழ்ப்பாணக் கூத்துக்கள்,13 நாடகங்கள் – டேமியன் சூரி.

**வரலாறு :** யாழ்ப்பாணத்து மண்வாசனை – வண்ணை தெய்வம்

**சுயசரிதை :** ஷோபாசக்தி( பிரெஞ்சு மொழிபெயர்ப்பு). Shoba – Itinéraired'unréfugié

**கட்டுரை :** கே.டானியல் வாழ்க்கைக் குறிப்புகள், மண்மறவா மனிதர்கள் – வி.ரி.இளங்கோவன். கறுப்பி–ஷோபாசக்தி. செந்தமிழ் வளர்ச்சியில் ஈழத்தவரின் பங்களிப்பு – ச.சச்சிதானந்தம்.

தமிழாலயம், அறிவாலயம், சிறீபாரதி ஆகிய புத்தகசாலைகள் இருக்கின்றன. ஈழநாடு, ஈழமுரசு ஆகிய பத்திரிகைகளும், தாமரை, நிலா, முற்றம், தெரிந்துகொள்வோம் ஆகிய சிற்றிதழ்களும் செய்திகள் தருகின்றன. சங்காரம், தமிழ்முரசு, எரிமலை, எழில், ஓசை, அம்மா, எக்சில், உயிர்நிழல், மௌனம், பாரிசு முரசு, (ஐரோப்பியமுரசு: ஆசிரியர்–கட்டுரையாளர்), ஆகியனவும் வந்து தமிழ் வளர்த்து மௌனித்து விட்டன. மாணிக்க விநாயகர், சித்தி விநாயகர், சிவன் கோவில், அஷ்டலக்சுமி கோவில், முருகன் கோயில், ஐயப்பன் கோயில், கருமாரி அம்மன், துர்க்கை அம்மன், பத்திரகாளி என 15 ஆலயங்கள் பாரிசிலும் புறநகர்களிலும் உள்ளன. மாணிக்கவிநாயகர் தேர்த்திருவிழாவில் விநாயகர் உலா வரும் தெருவெல்லாம் தமிழ்த் திருமுறைகள் பலமாக ஒலிப்பது சிறப்பு. தமிழில் கத்தோலிக்கத் திருப்பலிகள் பாரிஸ் இலங்கைத் தமிழ் கத்தோலிக்கப் பணிமையம் எனும் தேவாலயத்தில் நிகழ்கின்றன. Lourdes, Chartres ஆகிய பேராலயங்களிலும் தமிழில் திருப்பலிகள் இடம்பெறுகின்றன.

ஈழத்தவர் இதுவரைக்கும், தனிப்புறா, வாழவைத்த தெய்வம், முகத்தார்வீடு, முகம், இன்னும் ஒரு பெண், தயவுடன் வழிவிடுங்கள், ஏணை, பேரன் பேத்தி, சத்தியகீதை, என ஒரு பத்துத் தமிழ்த் திரைப்படங்கள் தயாரித்துத் திரையிட்டிருக்கின்றனர்! பல குறும்படங்களும் தயாரிக்கப்பட்டுள்ளன. தமிழ் நாடகங்கள் பல மேடையேற்றம் கண்டுள்ளன. 2015இல் திருக்குறள் முழுமையும் பாடலாக்கி இசைத் தட்டுவடிவில் திரு.ஸ்ரார் சிறீ வெளியிட்டிருக்கின்றார். தமிழமுதம், TRT தமிழ்ஒலி, பிரான்சு வானொலி ஆகிய வானொலிகளும்,TRT தமிழ்ஒளி, TTN தமிழ்த்தொலைக்காட்சி என்கிற தொலைக்காட்சிகளும், தமிழ் வளர்த்தன. இவற்றில் TRTவானொலி மட்டும்தான் இன்றுவரை ஒலிபரப்பப்படுகிறது.

'The Sri Lankan community in France is, however, very active in the transmission of Tamil language and culture to the younger generation. Some of its members have established schools to teach Tamil and published bilingual dictionaries and glossaries (Sachchithanantham, 1997 & 2009. Mapping French – Tamil Transl(oc)ations Azhagarasan Rajamanickam– University of Madras, Geetha Ganapathy–Doré –Universite Paris 13, Sorbonne Paris Cité.)

### தமிழ் பரம்பலில் லாசப்பெலின் பங்காற்றுகை

பிரான்சில் தமிழ் என்று சொன்னவுடன், தமிழுடன் தொடர்படுத்தி, அனைவரினதும் எண்ணத்தில் முதலில் வருவது 'Little India' எனவும், 'Little Jaffna' எனவும் அழைக்கப்படும் 'லாசப்பெல்''La Chapelle என்கிற வணிகவலயம். மளிகைக்கடைகள், தமிழ்ப்புடவைக்கடைகள், நகைக் கடைகள், உணவகங்கள், இறைச்சிக்கடைகள், திரைப்படக்கடைகள், புத்தகக்கடை, தமிழ் அச்சகம், பயணமுகவர் நிறுவனங்கள், மொழிபெயர்ப்பு அலுவலகங்கள் எனத் தமிழர் வாழ்வியல் சார்ந்து தமிழ் மணக்கும் அனைத்து வர்த்தகக்கடைகளும் நிறைந்த வலயமாக லாசப்பெல் பெயர் பெற்றது. ஓட்டல் சரவணபவன், செட்டிநாடு உணவகம், சங்கீதா, தலப்பாகட்டி, முனியாண்டி விலாஸ் என உணவகங்களும் உள்ளன. La Coumeuve, Marcadet–Poissoniers ஆகிய

இடங்களும் தமிழர்வணிக இடங்களாகப் புகழ் பெற்றுள்ளன..

### லா சப்பேல் வலயம் பாரிசு நகருக்கு அறிமுகப்படுத்திய தமிழ்ச்சொற்கள் :

கறி–curri–மாங்காய்–mangue. அரிசி, சோறு–riz. றோல்–roll. சமோசா–samosa. வடை–vadai. தோசை–dosai. இட்லி–idli. சாம்பார்–sampare, பரோட்டா–parota. ரொட்டி– rotti. சட்னி–chutney. பிரியாணி–briyani. சாறி – saree.

### தமிழர் வித்தியாலயம்–பன்னாட்டு உயர்கல்வி நிறுவனத்தின் தமிழ்ச்செயற்பாடுகள்

படமாளிகைச் சந்திப்பானது, இந்தியர்களுக்கு முதல் தமிழ்ப் பொதுநிகழ்வாக அமைந்தது போலவே இலங்கையருக்கும் அமைந்தது. இலங்கையர்கள் அகதிகளாக வந்ததனால் Alliance française கல்லூரியில் பிரெஞ்சு கற்கும் வாய்ப்பு இருந்தது. 1980இல் பிரான்சுக்கு அகதியாக வந்த நான் (கட்டுரையாளர்), Alliance française இலும், Université Sorbonne இலும் இரண்டு ஆண்டுகள் பிரெஞ்சு படித்துவிட்டு 1985இல் மொழியியலில் Inalco பல்கலைக்கழகப் பட்டம் பெற்றேன்.

1983ஆம் ஆண்டில் ஏற்பட்ட இனக்கலவரம் காரணமாகத் தமிழர்கள் கணிசமாக வந்தனர். அக்காலத்தில் தமிழ்வழிப் பிரெஞ்சு படிக்கப்பள்ளி இல்லை. நூல்களும் இல்லை. சிறுவர்கள் தமிழ் படிப்பதற்கான தமிழ்ப்பள்ளியும் இருக்கவில்லை. இலங்கையருக்குப் பிரெஞ்சு தெரியாததனால் பிரெஞ்சியருடன் பழக முடியவில்லை. நல்லவேலையும் தேடமுடியவில்லை. அதனால் பிரெஞ்சு, தமிழ் படிக்கவெனத் 'தமிழர் வித்தியாலயம்'– 'Ecole de Tamoul' என்ற பெயரில் முதற்தமிழ்ப்பள்ளியை, பாரிஸ்13 இல் Eglise Saint Hyppolite தேவாலயத்தில் நிறுவினேன். அங்கு வாடகைக்கு இடமெடுத்து வகுப்புகளை ஆரம்பித்தேன். 1985இல், 'பிரெஞ்சு மொழி, எனது நண்பன்' Le français, C'est mon ami 'எனும் பிரெஞ்சு இலக்கணநூலை இருமொழிகளிலும் தட்டச்சுசெய்து Ecole de Tamoul பதிவில் வெளியிட்டேன். தமிழ் இலக்கணத்தில் இல்லாத ஆனால் பிரெஞ்சு இலக்கணத்தில் உள்ள சில கூறுகளுக்குத் தமிழ்ச் சொற்களை உருவாக்கியிருந்தேன். பிரெஞ்சு இலக்கணத்தை முதன்முதல் தமிழில் தந்த நூல் இதுதான்!

எ+.கா: l'accent – அசையழுத்தம் l'apostrophe –எழுத்தெச்சக்குறி la conjugaison – வினைத்திரிபு
1986இல் பிரெஞ்சு–தமிழ் அகராதியை Dictionnaire: français–tamoul
எ+.கா: pain *nm* – திரளப்பம் (தனித்தமிழ்). பாண் (ஈழத்தமிழ்), செவ்வப்பம் (இந்தியத்தமிழ்)

சென்னையில் பிரெஞ்சு அச்சகம்தேடி அச்சிட்டுவந்தேன். Ecole de Tamoul, Insti tut International des Etudes Supérieures (Paris 18) ஆகியவற்றின் சட்டப்பதிவுகள் இணைக்கப் பட்டிருக்கின்றன.18ஆம் நூற்றாண்டில் பிரெஞ்சிய மதகுருமார்கள் எழுதிய அகராதிகளும் இலக்கணமும் இருந்தன. அவற்றின் தமிழ்ச்சொற்கள் கிறித்தவமதம் சார்பாகத் தொகுக்கப்பட்ட சொற்களும் பொருள்களுமாக இருந்தன. சாதாரணமக்களால் புரிந்துகொள்ளக்கூடிய நூல்களாகவும் கிடைக்கக்கூடியனவாகவும் அவை இருந்திருக்கவில்லை. பின்னர் முதன்முதல் பிரான்ஸ் நாட்டு வரலாற்றையும், பிரெஞ்சுமொழி வரலாற்றையும், 'பிரான்ஸ் நாடும் பிரெஞ்சு மக்களும்' எனும் தலைப்பில் ஓர் அறிவுக்களஞ்சியமாக வெளியிட்டேன். இதுவரையில் 24 மொழியியல் நூல்கள் எழுதி உள்ளேன். 13 அகராதிகளும் (வெளிவந்தவை 8+2+1 =11. வெளியாக இருப்பவை : 02.), தமிழருக்கான பிரெஞ்சு மொழி இலக்கண இருமொழி நூல்கள் பாரிசில் பெரிய பிரெஞ்சுப் பதிப்பகங்களான L'Harmattan, L'ophrys களில் 1997, 2009ஆகிய ஆண்டுகளில் வெளிவந்தன.

என்னிடம் கல்விகற்ற மாணவர்கள் பாரிசில் 1986 இலிருந்து தமிழ்ப்பள்ளிகள் நடத்துகின்றனர். ஆசிரியர்களாகப் பணிபுரிகின்றனர். மொழிபெயர்ப்பாளர்களாகவும் தொழில்பார்க்கின்றனர். எமது பள்ளி 2000 ஆண்டு தொடக்கம் மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம், அண்ணாமலைப் பல்கலைக் கழகம் ஆகியவற்றின் ஐரோப்பிய மையமாக இயங்கிவருகிறது. அவற்றின் பட்டப்படிப்புகளையும் நடத்துவதனால் எமது தமிழ்ப்பள்ளிக்கூடம் என்பதனைப் பாரிஸ் பன்னாட்டு உயர்கல்வி நிறுவனம் Institut International Etudes Supérieures–Paris (IIES) எனச்சட்டப்படி மீள்பதிவு செய்தோம். இதனைத் துணை வேந்தர் க.ப.அறவாணன் திறந்துவைத்தார். நிர்வாக இயக்குநராக ஞானாபியாத்ரிஸ் நியமிக்கப்பட்டார். இந்நிறுவனம் 148

தமிழ்ப்பட்டதாரிகளைஐரோப்பாவில்உருவாக்கியிருக்கின்றது. 2018 இலிருந்துதமிழ்ப்பல்கலைக் கழகத்தின் தரநிலைச்சான்றிதழ் நெறிகளையும் தமிழ்ப்பிள்ளைகளுக்காக நடத்திவருகின்றோம். தமிழ்ப்பல்கலைக்கழக மையத்தை மேனாள் துணைவேந்தர் திறந்துவைத்தார்.

உலகத் தமிழ்சங்கம்–மதுரை 2015இல் நடத்திய பன்னாட்டுக் கருத்தரங்குகளுக்கு முனைவர் ச.சச்சிதானந்தம் அழைக்கப்பட்டிருந்தார். 2015 தொடக்கம் 2016, 2018, 2019களில் நான்கு ஐரோப்பியத் தமிழ் ஆய்வியல் மாநாடுகளை இந்திய, இலங்கை, ஐரோப்பியப் பல்கலைக்கழகங்கள் என 09 பல்கலைக் கழகங்களுடன் இணைந்து ஏற்பாடு செய்திருந்தோம். முதல் மாநாட்டினைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்துடன் இணைந்து நடத்தியிருந்தோம். அன்றைய நாள் துணைவேந்தர் தொடக்கவுரை ஆற்றியிருந்தார். இரண்டாம் மாநாடு நல்லபடி நடப்பதற்கு திரு. தங்க. காமராஜ் கலந்து நோக்கவுரை ஆற்றியிருந்தார். மூன்றாவது மாநாட்டினை அப்போதைய மாண்பமை தமிழ்மொழி, பண்பாட்டு அமைச்சர் தொடக்கி வைத்துச் சிறப்புரை ஆற்றியிருந்தார். மாண்புமிகு முதலமைச்சரின் ஆசியுடனும் வாழ்த்துரையுடனும் தமிழ் வளர்ச்சித்துறை மேனாள் துணை இயக்குநர். மதிப்புக்குரிய ம.சி. தியாகராஜன் மற்றும் மேனாள் சட்டமன்ற உறுப்பினர். ஆர். நட்ராஜ் முதலானோர் கலந்துகொண்டு நான்காவது மாநாட்டிற்கு உயர்வு செய்திருந்தனர்.

பாரிசில் தமிழர்கள் பிரெஞ்சு, தமிழ்படிப்பதற்கென Ecole de Tamoul ஐ நிறுவி, தமிழ்வழிப் பிரெஞ்சு, பிரெஞ்சுவழித் தமிழ் கற்பதற்கான இலக்கணம், அகராதிகளை உருவாக்கி, தமிழகப் பல்கலைக்கழகப் பட்டப்படிப்புகளை மேற்கொள்வதற்கான கல்விப்பணிகளைச் செயற்படுத்தியதோடு, தமிழ்மொழி மேம்பாட்டுக்கான மாநாடுகளையும் ஏற்பாடு செய்து வருகின்றது பன்னாட்டு உயர்கல்வி நிறுவனம்.

### பிரான்சு வாழ்தமிழர்கள் ஆற்றும் தமிழ்த்தொண்டு

ஒரேமொழி பேசும் இருநாட்டுத் தமிழர்களும் இயன்ற முறைகளில் ஐம்பதாண்டு காலமாகத் தமிழ்ப்பணிபுரிந்து வருகின்றனர். இலங்கைத் தமிழர்கள் இந்தியத்தமிழர்களிலும் பார்க்க எண்ணிக்கையில் அதிகமாக இருக்கின்றனர். ஆதலினால் தமிழ்மொழி, கலை, பண்பாடு சார்ந்த செயற்பாட்டு வீச்சுக்களும் அதற்கான நிறுவனங்களும் அவர்கள்வசம் கூடுதலாக உள்ளன. இலங்கையர்கள் புலம்பெயர் நாடுகளுக்கு அகதிகளாக வந்ததனால், பிறந்தநாட்டுக்குத் 'திரும்பிப் போவதில்லை' என முடிவுசெய்து, ஆற்றல், திறமைகள், சிந்தனைகள் எல்லாவற்றையும் வந்த மண்ணிலேயே விதைக்கின்றனர். ஆனால் இந்தியர்களோ, இங்கு வளமாக வாழ்ந்தாலும், கடைசிக் காலத்தில் ஊருக்குத் 'திரும்பிப்போக வேண்டும்' என்பதனை அடிமனதிற் சுமந்து, இருக்கிற வரையில் இந்தியா–பிரான்ஸ் என வாழ்க்கையைக் கழிக்கின்றனர். அதனால், எல்லோ–ராலும் தமிழ் வளர்ச்சியிலான அர்ப்பணிப்பில் முழுமூச்சாக ஈடுபடமுடியாத சூழ்நிலை வலம்வருகின்றது.

தமிழ்நாடு தமிழ் வளர்ச்சித்துறையும், மதுரை–உலகத் தமிழ்ச்சங்கமும் பிரான்ஸ் நாட்டு தமிழ் வளர்ச்சியில் 2015 இலிருந்து பெருந்தன்மையுடன் தார்மீகக் கடப்பாடினை எடுத்துவருவது வரலாற்றுப் பெருமிதம் கொள்ளத்தக்கது. அதன்முதற்படியாக உலகத்தமிழ்ச்சங்கம் மதுரையிலும் சென்னையிலும் நடத்திய பன்னாட்டு தமிழ்க் கருத்தரங்குகளுக்கு முனைவர்.ச.சச்சிதானந்தம் ஆகிய என்னை அழைத்திருக்கின்றது. தமிழ்வளர்ச்சித்துறை அரசுசெயலராக இருந்த முனைவர் மூ.இராசாராம் அவர்கள் திருவள்ளுவர் சிலை பரிசு வழங்கி மதிப்புத் தந்திருந்தார். பிரான்சில் இடம்பெற்ற ஐரோப்பியத் தமிழ் ஆய்வியல் மாநாடுகளுக்கு இவை வாழ்த்துச்செய்திகளை அனுப்பியிருக்கின்றன.

மேற்படி மூன்றாவது மாநாட்டில் மேனாள் தமிழ்மொழி மற்றும் தமிழ்ப்பண்பாட்டு அமைச்சர் பண்பும், மாண்பும்நிறை க.பாண்டியராஜன் அவர்கள் 2018இல் கலந்துகொண்டு அறிவியல் தகவல்களுடன் இருதமிழர்களும் ஒன்றுபட்டுத் தமிழ்ப்பணி செய்யவேண்டும் எனவும் கருத்துரைத்திருந்தார். அமைச்சர் அவர்களுக்கு, 'தமிழ் மொழிக்காவலர்' என்ற விருதையும் அம்மாநாட்டில் வழங்கியிருக்கின்றது இந்நிறுவனம். அயலகத் தமிழறிஞர்களுக்கான இலக்கியம். இலக்கணம் மற்றும் மொழியியலுக்கான விருதுகளை முறையே திரு. பெஞ்சமின்

லெபொ, முனைவர் ச.சச்சிதானந்தம், கவிஞர் க.பாரதிதாசன், கவிதாயினி செ..கஸ்தூரிபாய் ஆகியோர்களுக்குக் கடந்த மூன்று ஆண்டுகளாக வழங்கியிருக்கின்றது. இவ்விருதுகளை மேனாள் மாண்பமை முதலமைச்சர் எடப்பாடி பழனிச்சாமி அவர்கள் வழங்கிப்பெருமை செய்திருக்கின்றார். இதனால் பிரான்சு நாட்டுக்குத் தமிழுக்கான பெருமை உரியதாகின்றது.

பிரான்சில் தொடக்க காலத்திலிருந்தே பாண்டிச்சேரித்தமிழரும் இலங்கைத்தமிழரும் சேர்ந்து பழகுவது மிகக்குறைவு. இலங்கைத் தமிழர் இங்கு வருமுன்னர், தமிழர் என்றால் அது பாண்டிச்சேரித் தமிழரை அடையாளம் காட்டியது, இலங்கையருக்குப் பிரெஞ்சு தெரியாது என இளக்காரமாக நினைத்து ஒன்று சேராமல் தத்தம்போக்கில் வாழ்ந்தனர். ஆனால் இலங்கைத்தமிழர் பெருமளவில் இங்கு வந்து, காலூன்றிய பின், தமிழ் காட்டும் பல முயற்சிகளையும் செயற்பாடுகளையும் ஆற்றிக்கொண்டேயிருக்கின்றனர்.

1982 – அப்போது நான் அயல்நாட்டுப் பல்கலைக்கழகத்தில் பணியாற்றிக்கொண்டிருந்தேன்; வெள்ளைப் பிரெஞ்சுக்காரர் ஒருவர் என்னைப் பார்த்துக் கேட்டார்.

'உங்களுடைய மொழி... அதுதானே ?'

'இல்லை'.

'உங்களுடைய மொழிதான் என்ன ?' 'தமிழ்'.

'ஓ! இலங்கைத் தமிழரின் மொழியா?

*மூலம் : பேரா. க.ப. அறவாணன். தமிழர் மேல் நிகழ்ந்த பண்பாட்டுப் படையெடுப்புக்கள்.1987.*

இவைபோன்ற காரணங்கள் இருதமிழினக் குழுக்களும் 'எண்ணெயும் தண்ணியும்' போன்று ஒட்டாத உறவாக ஐம்பதாண்டு காலமாக (1980–2020) வைத்திருக்கின்றன. ஆனால் இன்றும் படமாளிகைகளில் தமிழ்ப் படங்கள் திரையிடப்படும் போதெல்லாம் இருபகுதித்தமிழர்களும் தொடர்ந்து செல்கின்றனர். மூவேந்தர்களான சேர,சோழ, பாண்டியர் விலகித்தானே இருந்தனர்! பிறப்பால் இலங்கையனாக இருந்தாலும் பெற்ற கல்வியாலும் அடைந்த கல்விப்பெருமைகளாலும், அழகப்பா பல்கலைக்கழகத்தில் பிரெஞ்சுப் பேராசிரியராகப் பணிபுரிந்ததாலும், இந்தியாவிற்கு அளப்பரிய நன்றியுடைய இந்திய மண்ணை நேசித்து, இதயத்தால் இந்தியனாக வாழும் ச.சச்சிதானந்தம் ஆகிய நான் இருநாட்டுத் தமிழர்களையும் சகஉதரத்தவர்களாக்க சில ஆண்டுகளாக விடாமுயற்சி செய்து வருகின்றேன்.

அதில் பாதி வெற்றியும் பெற்றிருக்கின்றேன். நடைபெற்ற நான்கு மாநாடுகளிலும் பிரான்சில் ஆற்றிவரும் தமிழ்ப்பணிக்காக எட்டுப்பேர் தெரிவுசெய்யப்பெற்று விருதுவழங்கி பெருமைப்படுத்தப்பட்டிருக்கின்றனர். இதில் இருவர் ஐரோப்பியர், மூவர் இந்தியர், மூவர் இலங்கையர். இவர்களில் பேரா. யோ.முதியப்பநாதன், பேரா. ப.தசரதன். தொழிலதிபர் மு.நசீம். திரு. பெஞ்சமின் லெபோ, பேரா. தலிஞ்சன் முருகையா, திரு.பாரிஸ் பார்த்தசாரதி, டாக்டர். வி.ஜி.பி.சந்தோசம், அகராதியியல் துறை மேனாள் இயக்குநர் திரு.தங்க. காமராசு, பேரா.அறிவுநம்பி, பேரா.அ.குருமூர்த்தி முதலானோர். மற்றும் ஐரோப்பிய அறிஞர்கள்: Prof. Jaroslav Vacek(Czeck), Prof.GregoryJames (Hongkong), Prof.Dubiansky(Russia), Prof. Trieken (The Netherlands). Prof. Peter Schalk (Sweden).Prof. Urlike (Germany). Eva Wilden (Germany), Dr. Jean–Luc Chevillard (France), Dr. Sven(Germany). Prof. Pierre Mendy France), Prof.J.Pruvost (France) ஆகியோருடன் சீனம்–தமிழ் அகராதி தொகுத்த சீனக்கலைமகள் Zhao Jiang (China)உம் அடங்குகிறார்.

இந்தியத் தமிழ்ச்சங்கங்கள் கூட்டங்கள் நடத்துவதற்கு இலவசமாகப் பன்னாட்டு உயர்கல்வி நிறுவனம் மண்டபம் கொடுத்துவருகின்றது. இந்நிறுவனத்தில் அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பட்டதாரி ஆனவர்களில் இந்தியர்களும் அடங்குவர். அவர்களில் உலகத்தமிழ்ச்சங்க விருதுபெற்ற கி.பாரதிதாசனும், செ.கஸ்தூரிபாயும் அடங்குவர். 2019 உலகத்தமிழ்ச்சங்கத்தின் அயலகத் தமிழறிஞருக்கான மொழியியல் விருதினை நான் பெற்றபோது, பிரான்சில் எனக்குப் பாராட்டுவிழா செய்து பெருமைப்படுத்தியவை இந்தியத் தமிழ்ச்சங்கங்களே அன்றி இலங்கைச் சங்கங்கள் அல்ல! உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திற்காகப் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களைப் பிரெஞ்சில் மொழியாக்கம் செய்துமுடித்திருக்கின்றேன். தொடர்ந்தும் உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்பணித்தவாறு, திருக்குறளினை இக்காலப் பிரெஞ்சில் மொழிபெயர்ப்பதில் ஈடுபட்டிருக்கின்றேன்.

## பிரான்சில் தமிழர்களால் உருவாக்கப்பெற்ற நூல்கள் :

**அகராதிகள் : இருமொழி, மும்மொழி பிரெஞ்சு தமிழ் – ஆங்கிலம்**

| | பெயர் | ஆசிரியர் | ஆண்டு | பதிப்பகம் |
|---|---|---|---|---|
| 01 | Dictionnaire : français - tamoul அகரமுதலி : பிரெஞ்சு – தமிழ் | ச.சச்சிதானந்தம் | 1986 | Ecole de tamoul |
| 02 | Dictionnaire pratique : français – tamoul, tamoul – français<br>பிரெஞ்சு – தமிழ், தமிழ் - பிரெஞ்சு அகராதி | ப. சண்முகசுந்தரம் | 1995 | Amutha |
| 0 3 | Dictionnaire pratique : français – tamoul srilankais நடைமுறை அகரவரிசை: பிரெஞ்சு – இலங்கைத்தமிழ் | S.Sachchithanantham | 1997 | L' Harmattan |
| 04 | Dictionnaire : français – tamoul , tamoul-français<br>பிரஞ்சு – தமிழ், தமிழ் - பிரஞ்சு | தே.பிரகலாதன்<br>பி.வசந்தி | 2003 | ASCES |
| 05 | Dictionnaire moderne : français - tamoul<br>தற்கால அகராதி : பிரெஞ்சு – தமிழ் | எச். நாகராஜன் | 2005 | H.Nagarajan |
| 06 | சொல் வங்கி : தமிழ் - ஆங்கிலம் - பிரெஞ்சு<br>Bank of Words : Tamil – English- French<br>Banque des Mots : tamoul – anglais - français- | ச.சச்சிதானந்தம் | 2008 | Gnana |
| 07 | Vocabulaire thématique : tamoul - anglais<br>பொருள்வழி சொல்லகராதி : தமிழ் - ஆங்கிலம் | ச.சச்சிதானந்தம் | 2008 | Gnana |
| 08 | Thematic Vocabulary : English – French<br>பொருள்வழி சொல்லகராதி : ஆங்கிலம்-பிரெஞ்சு | ச.சச்சிதானந்தம் | 2008 | Gnana |
| 09 | Vocabulaire thématique : anglais - tamil<br>பொருள்வழி சொல்லகராதி : ஆங்கிலம்-தமிழ் | ச.சச்சிதானந்தம் | 2008 | Gnana |
| 10 | Dictionnaire de poche : français – tamoul, tamoul – français<br>கையகராதி : பிரெஞ்சு –தமிழ், பிரெஞ்சு- தமிழ் | ப. சண்முகசுந்தரம் | 2010 | Amutha |
| 11 | Vocabulaire thématique : tamoul - français<br>பொருள்வழி சொல்லகராதி : தமிழ் - பிரெஞ்சு | S.Sachchithanantham | 2010 | L'Ophrys |

| | | | | |
|---|---|---|---|---|
| 12 | Vocabulaire thématique : français - tamoul<br>பொருள்வழி சொல்லகராதி : தமிழ் - ஆங்கிலம் | S.Sachchithanantham | 2010 | L'Ophrys |
| 13 | பிரெஞ்சு அகராதியியல் -ஓர் வரலாற்றுப் பார்வை | S.Sachchithanantham | 2010 | தமிழ்ப் பல்கலைக்கழகம் |
| 14 | தமிழ்- பிரெஞ்சு அகராதியியலின் அமைப்பும் உள்ளடக்கமும் - முனைவர் பட்ட ஆய்வேடு | S.Sachchithanantham | 2014 | தமிழ்ப் பல்கலைக்கழகம் |
| 15 | பொருள் வழி சொல்லகராதி தமிழ் - பிரெஞ்சு<br>Vocabulaire thématique : français - tamoul | S.Sachchithanantham | 2017 | உலகத் தமிழ்ச் சங்கம் மதுரை |
| 16 | தமிழ் அகராதியியலின் பரிணாமம், பரிமாணம் ஐரோப்பியத் தமிழ் ஆய்வியல் மாநாடு – 4 | S.Sachchithanantham | 2019 | IIES |

### ii) இலக்கணம்,இலக்கியம், மொழியியல் - இருமொழி, மும்மொழி நூல்கள்

| | பெயர் | ஆசிரியர் | ஆண்டு | பதிப்பகம் |
|---|---|---|---|---|
| 01 | Le français, C'est mon ami<br>பிரெஞ்சு மொழி, எனது நண்பன் தமிழ் | ச.சச்சிதானந்தம் | 1985 | Ecole de tamoul |
| 02 | Vanakkam – Bonjour<br>அடிப்படைத் தமிழ் | Appasamy Murugaiyan | 1986 | BPI Centre Pompidou |
| 03 | Le tamoul facile<br>எளிதில் தமிழ் கற்கும் முறை | P.Chanemougas Sunthiram | 1986 | Maisonneuve |
| 04 | Le français courant<br>நடைமுறை பிரஞ்சு | தே.பிரகலாதன்<br>பி.வசந்தி | 1993 | ASCES |
| 05 | Grammaire française<br>பிரெஞ்சு இலக்கணம் | ச.சச்சிதானந்தம் | 1993 | Ecole de tamoul |
| 06 | Le français à l'usage des Tamouls<br>தமிழருக்கான பிரெஞ்சு மொழி வழிகாட்டி | S.Sachchithanantham | 1997 | L' Harmattan |
| 07 | Les Réflexions français பிரெஞ்சுச் சிந்தனைகள் (கட்டுரைத் தொகுப்பு) | ச.சச்சிதானந்தம் | 1997 | Gnana |
| 08 | La France et les Français<br>பிரான்ஸ் நாடும் பிரெஞ்சுப் பண்பாடும் | ச.சச்சிதானந்தம் | 1997 | Gnana |
| 09 | வைத்தியர் ஆக்கப்பட்ட குடிகாரன் -மோலியேர் (நாடகம் மொழிபெயர்ப்பு) Le Médecin malgré lui | ச.சச்சிதானந்தம் | 1998 | TRT வானொலி |
| 10 | பிரெஞ்சு நாடகக் கலைஞர் மோலியேர் (கட்டுரை) | ச.சச்சிதானந்தம் | 1998 | கலையமுதம் |
| 11 | Victor Hugo எழுத்து வாழ்க்கை | S.Sachchithanantham | 1999 | ஆவணம் |

| | | | | |
|---|---|---|---|---|
| 12 | Fables de Jean de la Fontaine<br>∴பொன் தெய்ன் புனைகதைகள் | S.Sachchithanantham | 2000 | மௌனம் |
| 13 | Des poèmes français<br>சுவையான சில பிரெஞ்சுக் கவிதைகள் | S.Sachchithanantham | 2001 | Gnana |
| 14 | பிரெஞ்சு மொழி – ஓர் ஆழ்ந்த அறிமுகம் | ச.சச்சிதானந்தம் | 2002 | கட்டுரை |
| 15 | Le tamoul sans peine | Elisabeth Sethupathy | 2002 | ASSIMIL |
| 16 | A Comparative Study of English and French<br>தமிழ் வழி ஆங்கிலம் பிரெஞ்சு ஒப்பீட்டுக்கற்கை<br>L' Étude Comparative de l'anglais et du français | S.Sachchithanantham | 2004 | Gnana |
| 17 | Grammaire précise du français<br>தெளிவான பிரெஞ்சு இலக்கணம் | S.Sachchithanantham<br>Béatrice Gnana | 2010 | Gnana |
| 18 | Le tamoul parlé | P.Chanemougas Sunthiram | 2013 | L' Harmattan |
| 19 | Parlons tamoul | Elisabeth Sethupathy | 2015 | L' Harmattan |
| 20 | தெரியத் தெரியத் தெரியாமை தெரியும்<br>(கட்டுரைத் தொகுப்பு) | S.Sachchithanantham | 2014 | Gnana |
| 21 | ஐரோப்பாவில் தமிழ் கற்றலும் கற்பித்தலும்<br>ஐரோப்பியத் தமிழ் ஆய்வியல் மாநாடு - 1 | S.Sachchithanantham | 2015 | IIES |
| 22 | ஐரோப்பாவில் தமிழ் | S.Sachchithanantham | 2016 | IIES |
| 23 | திருக்குறள் பொருட்புலக் கட்டமைப்பு<br>ஐரோப்பியத் தமிழ் ஆய்வியல் மாநாடு - 2 | S.Sachchithanantham | 2016 | IIES |
| 24 | ALAGAPPA – Un bel ESPRIT<br>அழகப்பா செட்டியார் : வாழ்க்கை வரலாறு | S.Sachchithanantham | 2017 | Alagappa University |
| 25 | செவ்விலக்கியமும் விபுலாநந்தமும் ஐரோப்பியத் தமிழ் ஆய்வியல் மாநாடு - 3 | S.Sachchithanantham | 2018 | IIES |
| 26 | இன்பத்தமிழும் இலங்கையரும்<br>ஐரோப்பியத் தமிழ் ஆய்வியல் மாநாடு – 4 | S.Sachchithanantham | 2019 | IIES |
| 27 | திராவிடத் தமிழும் இலத்தீனியப் பிரெஞ்சும் | S.Sachchithanantham | 2020 | உலகத் தமிழ் |
| 28 | Les dix-huit Anthologies Mineures<br>பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் - பிரெஞ்சு மொழிபெயர்ப்பு<br>ஐரோப்பியத் தமிழ் ஆய்வியல் மாநாடு – 4 | S.Sachchithanantham | 2020 | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் |
| 29 | இலகுவாக தமிழ் கற்றலுக்கான வழிகாட்டி<br>Approche simplifiée pour apprendre le tamoul | Béatrice Gnana<br>நூல் அச்சிடும் பணி நடக்கிறது... | 2020 | IIES |


Récépissé de Déclaration d'Association










படங்கள் : Ecole de Tamoul சட்டப்பதிவு. சொல்லகராதி. மாநாட்டு மலர். பிரெஞ்சு நூல்கள்

**ஆய்வு மூலங்கள்:**

1 La diaspora tamoule en France : entre visibilité et politisation. Anthony Goreau - Ponceau

2. முனைவர். பேராசிரியர் ச. சச்சிதானந்தம். பிரான்ஸ் நாடும் பிரெஞ்சு மக்களும். ஞானா .பாரிசு. 1997.

3. Mapping French - Tamil Transl(oc)ations Azhagarasan Rajamanickam- University of Madras, Geetha Ganapathy-Doré -Université Paris 13, Sorbonne Cité

4. பேராசிரியர் ச. சச்சிதானந்தம். ஐரோப்பாவில் தமிழ்.. பன்னாட்டு உயர்கல்வி நிறுவனம். பாரிசு. 2016

5. பேரா. க.ப. அறவாணன். தமிழர் மேல் நிகழ்ந்த பண்பாட்டுப் படையெடுப்புக்கள்.1987.

# மறை சொல்லும் மறுப்பும் மறைப்பும்

**திரு. இரா. திருமாவளவன்**
தேசியத் தலைவர்,
மலேசியத் தமிழ்நெறிக் கழகம்,
மலேசியா



எதிர்மறை நேர்மறை என மறையைச் சேர்த்து எழுதும், சொல்லும் வழக்கைச் சிலர் ஆள்கின்றனர். இவற்றுள நேர்மறை எனச் சொல்வது சரியா?

சரியா? பிழையா? என அறிய, மறையில் மறைந்துள்ள நுட்பப் பொருளை அறிந்தால் கட்டாயம் தெளிவுறும்..

எல்லாவற்றுக்கும் ஓரே தீர்வு வேர்ச்சொல் விளக்கமேயாகும்...

உல் எனும் உகரச் சுட்டு ஆணிவேர், பல்வகை கருத்துகளைத் தந்து சொற்களைப் பிறப்பிக்கும் என்பது பாவாணரின் கோட்பாட்டு விளக்கமாகும்.

அக்கருத்துகளில் ஒன்றே வளைவுக் கருத்தாகும். பாவாணர் வித்தினின்று முளைவிட்டு கிளம்பிய ஆணிவேரின் நகர்ச்சியை அடிப்படையாகக் கொண்டே வேர்ச்சொல்லின் வழியிலான சொற்பிறப்பியலையும் கண்டறிந்தார். இது இருவகை கண்ணறைகளின் நகரும் நகரா இயற்கை அறிவியலையும் விளக்கியுரைக்கும் நுட்பம் வியப்புக்குரியதே.

வேர் நீரைத் தேடி நகர்கையில் முன் தட்டுப்படும் பொருளின் உறுதித் தன்மைக்கேற்ப, அதனைத் தாண்டலாம்; துளைக்கலாம்; அல்லெனில் வளையலாம். வளைந்து திரும்பலாம்.

வளைதலுக்கு முன் முட்டுப்பட்ட வேரின் நேர் நகர்வு முடங்கும், முடங்கிய நகர்வு வளைதலால் தொடரும்; ஆனால் அது வளைவு பெற்ற நகர்ச்சியாகும்.

எனவே, வளைதலால், வளைவு, வட்டம், கோணல், கோடல், நேர் எதிர் திரும்பல், வருதல் முதலான பல்வகைக் கருத்துகள் பிறக்கும்.

அவ்வாறு வளைதலால் எதிர் நிலைக் கருத்தை உணர்த்திப் பிறந்த சொல்லே மறை என்பது.

உல்> முல்> மல்> மறு.
வளைந்து எதிர் நிலைக்குத் திரும்பியதால் முந்தைய செல்கைக்கு எதிர்முகமாய் நிற்பது. இது முரணி மறுத்தல் கருத்தை உணர்த்தியது. முரண் என்பதுவும் அவ்வாறு எதிர்நின்ற கருத்தை உணர்ததும் வளைவுப் பொருள் வேர் விளைச்சலே.

உல்> முல்> மல்>மறு > மறை
இங்கே மறை மறுப்புப் பொருளை உணர்த்தி நிற்கும். எதிர் நிலையில் நின்று மறுத்தலால் எதிர்மறை ஆயிற்று.

வளைவே வட்டமுமாகும். வட்டமாய்ச் சுழன்று சுழன்று வருவது சுழற்சியாகவும் சுழற்சி ஒழுங்கெனவும் கொள்ளப்பெற்றது. சுழற்சியாய் ஓர் ஒழுங்கிற்குள் அமையும் அனைத்து வினைகளும் வட்டப் பொருளையே தந்தன.

தடவை, தாட்டி, வாட்டி, சுழற்சி , முறை என அமைந்த சொற்கள் அனைத்தும் வட்டப் பொருளைத் தந்தனவே.

உல்> முல்> முறு > முறை = சுழற்சியாய் அமைந்த ஒழுங்கு.

முறு > முறுக்கு = வளைத்து நெளித்தல்

( முருகன் எனும் பெயர்ச்சொல்லின் வேர் வளைதல் பொருளைத் தராது. அது தோன்றல் வேர்கருத்தை அடியாகக் கொண்ட இளைமைக் கருத்துச் சொல்லாகும். )

நேர்முறை என்பது நேரியவாறு அமைந்த ஒழுங்கமைவு எனப்பொருளாகும்.

இங்கு மறையும் முறையும் ஒரே வேர் கருத்தினின்று பிறப்பினும் ஒன்று மறுப்பையும் மற்றொன்று ஒழுங்கமைவையும் குறிப்பதாகும்..

வளைவுப் பொருளில், மறுத்தல் , திரும்பல் கருத்தில் பல்வேறு சொற்களைப் பட்டியலாய்க் காணலாம்..

மறு, மறை, மாறு, மாற்று, மற்று, மற்றை, மறுபடி, மறுக்களி, மற்றொன்று, மற்றப்படி, மற்றவர், மாற்றான் முதலியன வளைதல் கருத்தில் மறுதலைப் பொருளைத் தருவனவே.

மறை கலங்கல் கருத்து வேரிலிருந்து கருமைப் பொருளைத் தந்து இன்மைப் பொருளைத் தந்தும் இயங்கும். ஒரே சொல் ஒரே வேரில் பிறப்பினும் இரு வேறு கருத்தில் பிறந்ததுவால் இருவேறு பொருளைத் தந்து விளங்கும்.

உல் > சேர்தல் கருத்தைத் தரும் வேர்.

முன் விளக்கப்பட்டது போல் வேர், முன்னோக்கி நகர்ந்து முட்டுப்படும் பொருளோடு ஒட்டுவதை, சேர்வதை, கலப்பதை விளக்குவதே கலத்தல் அல்லது சேர்தல் கருத்து வேராகும்.

சேரல், கலத்தல், பொருந்தல், இணைதல், கரைதல் அனைத்தும் இக்கருத்துப் பற்றியனவே.

பக்கவேரினின்று கிளைவேர்களும் சல்லி வேர்களும் பிறப்பது போல் சொற்களுக்குள்ளும் கிளைக் கருத்துகளைத் தரும் சொற்களும் பிறக்கும்.

தெளிந்த நீரில் பிற கலந்தால் அல்லது கிண்டி கலக்கினால் கலங்கல் உருவாகுவது போல் சேர்தலால் கலங்கல் கருத்து உருவாகும். கலங்கியது கருக்கலாகும் அல்லது கருமையாகும் . கலங்கிய கருக்கலில் தெளிவற்ற இருண்மை உருவாகி உட்பொருள் தெரியாதும் போகும். தெளிவற்றுத் தெரியாது போதலே மறைதல்.

உல்> முல் > மல் = கருமைக் கருத்து வேர்.
உல்> முல்> மல் > மய் > மை = கருமை
உல்> முல்> மல் > மால் = கருமை நிறம், திருமால்
உல்>மல் > மால் > மார் > மாரி = மழை
உல்> முல்> மல் > மால்> மாய் > மாயம் = மறைவு
மாய் > மாயோன்
மல்> மய்> மயக்கம் = கலக்கம், குழப்பம், தலைச்சுற்றல்
உல்> மல் > மறு > மறை = காணாதிருத்தல், ஒளித்தல்
மறை = பிறர் அறியாதவாறு ஒளித்தல், கள்ளர் அறியாவண்ணம் விலை உயர் பொருட்களை மறைத்து வைத்தலால் , மறை காத்தல் பொருளையும் கிளைக்கருத்தாய்த் தந்தது.

உயர் கருத்துகளைப் பொதித்து வைத்திருப்பதால் அரிய நூல்கள் மறை நூல்கள் எனப்பட்டன. அத்தகு கருத்துகள் மறைபொருள், மறைமொழி எனவும் கூறப்பட்டன.

"மறைமொழி தாமே மந்திரம் என்ப" எனத் தொல்காப்பியமும்

"நிறைமொழி மாந்தர் மறைமொழி" என வள்ளுவமும் மறை பற்றி விளக்கியிருப்பதைக் காணலாம்.

எதிர்மறையில் அமைந்த மறையும் மறைமொழியில் அமைந்த மறையும் ஒருபொருளனவல்ல.

எதிர்மறை போல் நேர்மறை எனல் தவறே. நேர்முறை எனல் நேரொழுங்காகும். எதிர்மறை , எதிர்நின்று மறுதலையாய் அமைவது. நேர்மமும் எதிர்மமும் நேர்மை எதிர்மை போல் அமைவன. நேரியப் பண்பு நேர்மை, மறுதலைப் பண்பு எதிர்மை.

நேர்மம் நேரிய சிந்தனை
எதிர்மம் முரணிய சிந்தனை

மறை சொல்லும் மறுப்பும் மறைப்பும் ஒரே வேரினின்று இருவேறு கருத்தாய்த் தெளிவுறுவதை வேர்ச்சொல் ஆய்வால் உணரலாம்..,

# அரிமளம், அரிமழமாகிப் போன அரிமணம்

– அண்டனூர் சுரா

பட்டதாரி ஆசிரியர், காட்டுநாவல், கந்தர்வகோட்டை.

புதுக்கோட்டையிலிருந்து பதினெட்டுக் கல் தொலைவில் இருக்கிறது, அரிமழம். இவ்வூர் அரிமளம் என்றும் அரிமழம் என்றும் அழைக்கப்படுகிறது. ராவ் பஹதூர் ப. சம்பந்த முதலியார் அரிமலம் என்கிறார். மளம் என்பதற்கு மணம் என்றும் மழம் என்பதற்கு இளமை என்றும் பொருள்.

இவ்வூராார்களிடம் பெயர்க்காரணம் கேட்கையில் அரி என்றால் சிங்கம் என்றும் மழம் என்றால் வீரர்கள் என்றும் சிங்கம் போன்ற வீரர்களைக் கொண்ட மறவர் ஊர் என்று சொல்கிறார்கள். சிங்கத்தைக் குறிக்கும் அரி என்கிற சொல் வடமொழி. தமிழ்ச் சொற்கள் அரி என்பதற்கு நெற்கதிர், வண்டு, கொடு, பகைவன், பாம்பு, அழகு, மரவயிரம், தேர், பரற்கல், பறை, மூங்கில், குரங்கு, மழைத்தூவல், தவளை, விதை, சிலம்பின் பரல் என்கின்றன. மேலும் அரி என்பதற்குப் பனை, பனங்கள், பனங்கருக்கு (சூடாமணி, பிங்கல நிகண்டு), நெல்லுக்கு அரி என்றொரு பெயருண்டு (பிங்கல நிகண்டு) நெற்கதிரை அறுத்து வரிசையாக வைப்பதற்குப் பெயர் அரி. நெற்குவியல் – அரி. கதிர் அறுக்கும் பருவத்தை அரி என்கிறது பெரும்பாணாற்றுப்படை. அதாவது 'அரி புகு பொழுதின் இரியல் போகி'. இதுதவிர, தற்கால அகராதிகள் அரி என்பதற்குக் கள், பனை, அரிசி, குதிரை, கூர்மை, சிங்கம், சூரியன், சந்திரன், பகைவன், திருமால், அரிதல், கண்வரி, கடல், பொன், கிண்கிணிப்பரல் என்கின்றன.

தமிழக ஊர்ப்பெயர்கள் முதலில் நிலம், மண் சார்ந்தும் அதன்பின் மரம், செடி, கொடிகள் கொண்டும் அதற்குப் பிந்தைய ஊர்கள் நீர் நிலைகளைக் கொண்டும் பிறகு மக்கள், குடி சார்ந்து பெயர்ச்சூட்டப்பட்டு வந்திருக்கின்றன. குடி சார்ந்து பெயர்சூட்டலின் நீட்சிதான் சாதியப் பெயர்கள். அந்த வகையில் அரிமளம் என்பது தொன்மையான ஊர்.

இவ்வூர் குறித்து அகநானூறு,

"அரிமண வாயில் உறத்தூர் ஆங்கண்
கள்ளுடைப் பெருஞ்சோற்று எல்லிமிழ்
அன்ன"

என்று பாடியிருக்கிறது. இவ்வூர் 'எவ்வி' என்கிற மன்னனுக்குரிய ஊராக இருந்தது. இவன், 'மாவேள் எவ்வி' என்று அழைக்கப்பட்டான். பெருங்கொடை வள்ளல். இவன் காவிரி பாயும் மிழலை நாட்டவன். எவ்விச் சங்கக் காலத்திய குறுநில மன்னன். பறம்புமலைத் தலைவன் வேள்பாரிக்கு மூத்தவன். இவனது தலைநகர் நீடூர் என்று அழைக்கப்பட்டது. ஆகவே இவன் 'நீடூர் கிழவன்' என்று அழைக்கப்பட்டான்.

அரிமண வாயில் உறத்தூர் எனுமிடத்தில் பாண்டியன் படைத் தலைவன் நெடுமிடல் என்பவனைப் போரிட்டு வென்றான். அவன் வென்ற இடம் அரிமண வாயில். இந்த இடத்தில் வெற்றியைக் கொண்டாடும் பொருட்டுத் தன் படைவீரர்களுக்குக் கள்ளுடன் பெருஞ்சோறு அளித்து மகிழ்ச்சி அடைந்தான். பிறகு இதே

மன்னன் 'கொடித்தேர்ச் செழியன்' எனும் மன்னனிடம் தோற்று நாட்டைப் பறிகொடுத்தான்.

எவ்வி விழுப்புண் பட்டு மாண்டுபோன செய்தியைப் புறநானூறு 233 ஆவது பாடல் பாடுகிறது. எவ்வி மாண்டான் என்கிற செய்தி பொய்யாக இருக்கக் கூடாதா, என்கிறது அப்பாடல். இப்பாடலின் தொடர்ச்சியை அகநானூறு 115 பாடுகிறது. எவ்விப் போரில் மாண்டான், என்பதை அறிந்த பாணர்கள், தாம் ஊதிப் பிழைக்கும் கொம்புகளை நிலத்தில் எறிந்து துக்கம் கொண்டனர்.

எவ்விப் போரில் தோல்வி கண்டு மாய்ந்துபோனதற்கும் பின்னே புலவரை இகழ்ந்த கதையொன்று இருக்கிறது. கழாத்தலையார் என்றொரு புலவர் இருந்தார். இந்தப் புலவரின் புலமையை எவ்வி இகழ்ந்து நகையாடுகிறார். இதனால் மனமுடைந்த புலவர் எவ்வி மீது சாபக்கவி பாடுகிறார். இந்தச் சாபத்தால் எவ்விக் குடியினர் பூண்டோடு அழிந்து போயினர் என்கிறது புறநானூறு 202 ஆவது பாடல்.

எவ்வி என்பது ஏற்றத்தைக் குறிக்கும் ஒரு சொல்லாக இருக்கிறது. ஏற்றம் என்பது தாழ்வான இடத்திலிருந்து நீரை மேட்டு நிலத்திற்கு ஏற்றுவதாகும். ஆற்றுநீரைப் பள்ளமான இடத்திலிருந்து மேட்டு நிலத்திற்குப் பாய்ச்சுவதற்கு முன்னெடுத்ததால் அவனது பெயரால் ஏற்றம் அழைக்கப்பட்டிருக்கலாம். அரிமணம் வாயில் என்பது அரிமணம் என்றாகிப் பிறகு அது அரிமளம், அரிமழம் என்பதாகத் திரிந்திருக்கிறது. இங்கு மளம் என்பதும் மணம் என்பதும் ஒன்றுதான்.

மழம் என்பது இளமை பெயர். "மழமும் குழவும்" இளமைப் பெயர்கள் என்கிறது தொல்காப்பியம். "மறம்புகல் மழ களிறு உறங்கும் நாடன்" என்கிறது அகநானூறு. இங்கு மழம் என்பது இளமை.

இன்று அரி என்பது சிங்கம் என்றும் மழம் என்பது வீரர்கள் என்றும் பொருள்கொண்டு வீரத்தோடு இவ்வூர் தொடர்புபடுத்துவது உயர்வு நவிற்சி.

அகநானூறு பாடுகின்ற "அரிமண வாயில் உறத்தூர் ஆங்கண் கள்ளுடைப் பெருஞ்சோற்று எல்லிமிழ் அன்ன" என்கிற வரியிலிருந்து அரிமணம் என்பது மணக்கின்ற அரி என்பதாகப் பொருள்கொள்ள வேண்டும். மூங்கில் அரிசி மற்றும் பனையை அரி என்கிறது சங்க மொழி. அகநானூறு பாடும் கள், பெருஞ்சோறு, எல்லிமிழ் அன்ன என்கிற வரியோடு பார்க்கையில் கள்ளும் சோறும் கலந்த மணம் கொண்ட ஊர் அரிமணம் என்றாகிறது. அரிமணம் அரிமளம் என்றாகிப் பிறகு அது அரிமழம் என்றாகியிருக்கிறது. புதுக்கோட்டை கல்வெட்டுகள் அரிமழம் என்று குறிப்பிட்டுள்ளன. மேலும் மு.ரா. கந்தசாமிக் கவிராயர், அரிமழத் தலபுராணம் என்றொரு நூல் இயற்றியுள்ளார். அரிமழம் என்பது அரிமளம் என்பதன் திரிபு பெயர்.

அரிமணம் என்பது அரிமளம் என்றாகிப் பிறகு அது அரிமழம் என்பதாகத் திரிந்துள்ளது. இங்கு அரி என்பது பனை மற்றும் மூங்கிலைக் குறிக்கும் சொல்லாகவும் அவை தரும் கள் மற்றும் அரிசியைக் குறிக்கும் சொல்லாகவும் இருக்கிறது.

# தமிழ்க் கலைக்கழகத்தின் 135–ஆவது கூட்டம்




13.06.2023 ஆம் நாள், தமிழ்க் கலைக்கழகத்தின் 135–ஆவது கூட்டம் அகரமுதலி இயக்ககத்தில் இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், திரு. அ. மதிவாணன், திரு.நா.சு.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர்.மொழி பெயர்ப்பு உதவிப் பிரிவு அலுவலர் திருமதி இளவேனில் முல்லை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா. சுலோசனா மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 220 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

# தமிழ்க் கலைக்கழகத்தின் 136–ஆவது கூட்டம்




27.06.2023 ஆம் நாள், தமிழ்க் கலைக்கழகத்தின் 136–ஆவது கூட்டம் அகரமுதலி இயக்ககத்தில் இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், திரு. அ. மதிவாணன், திரு.நா.சு.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா. சுலோசனா, நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 260 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

கூட்டத்தில் ஏற்பளிக்கப்பட்ட கலைச்சொற்களுள் சில:

1.Foam plastic – நுரை நெகிழிகள்
2.Garconniere – இளவர் இருப்பிடம்
3.lead digital – முன்னணி எண்மியம்
4.mesozoic era– இடையூழிக் காலம்
5.miotic pupil – கருவிழிச் சுருக்கம்
6.moderator–தணிப்பி
7. Pedal car–மிதிகட்டை வண்டி
8.people person –மக்கள் நலத்தர்
9.photo elastic –ஒளி மீட்சி
10.puff piece – போற்றி.

# அகரமுதலி இயக்ககம் நெறிப்படுத்தும் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!

"என்றும் தமிழ் வளர்க - கலை

யாவும் தமிழ்மொழியால் விளைந்தோங்குக"

- பாவேந்தர் பாரதிதாசன்

இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவருவது தமிழ்மொழியின் சொல்வள மேம்பாட்டிற்குரிய முகாமையான பணியாகும். புறநிலையில் உள்ள சொல்லாக்க வல்லுநர்களிடமிருந்தும் பல்வேறு துறைசார்ந்த கலைச்சொற்களைப் பெற்று, ஆய்ந்து சொற்குவையில் சேர்த்து, தமிழின் கலைச்சொல் வளத்தை உயர்த்தும் நோக்கில், தமிழ்நாடு அரசின் சீரிய நெறிப்படுத்தலின்கீழ், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தால் 2021 அக்டோபர் 1ஆம் நாளிலிருந்து வெள்ளிதோறும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் நடத்தப்பெறுகிறது. இப்பயிலரங்கத்தின் 90–92 வரையிலான அமர்வுகள் 2023 சூன் 16, 23, 30 ஆகிய நாள்களில் நடைபெற்றன. 90ஆவது அமர்வில் காரைக்குடி, அழகப்பா பல்கலைக்கழக மேனாள் துணைவேந்தர் முனைவர் பேரா. சொ. சுப்பையா அவர்களும், பாரிசு நாட்டைச் சேர்ந்த அகராதியியல் அறிஞர் முனைவர் பேரா. ச. சச்சிதானந்தம் அவர்களும் பங்கேற்று வாழ்த்துரை வழங்கிச் சிறப்பித்தார்கள். பல்பயிலரங்க அமர்வுகளில் அயல்நாட்டு அறிஞர்கள், உள்நாட்டு அறிஞர்கள் பங்கேற்று பல்வேறு துறைசார்ந்த தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றினர். சொல்லாய்வாளர்கள், சொல்லாக்க அறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள் உள்ளிட்ட பலர் பங்கேற்றும் பார்த்தும் பயன்பெற்றனர். கலைச்சொற்களை அறிமுகம் செய்த சொலாக்க அறிஞர்களுக்கும், பங்கேற்பாளர்களுக்கும் இயக்ககத்தின் சார்பில் பாராட்டுச் சான்றிதழ்களும் பங்கேற்புச் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன. அமர்வுகளில் பங்கேற்கும் அறிஞர்களின் ஒருங்கிணைப்பினைப் பாரிசு பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவன இயக்குநர் முனைவர் பேரா. ச. சச்சிதானந்தம் அவர்களும், தொழில்நுட்ப ஒருங்கிணைப்பினைச் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் மற்றும் இயக்கக உதவிப் பதிப்பாசிரியர் திரு. ஏ. காந்தி ஆகியோரும் மேற்கொண்டனர்.

## 16.06.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்



**திருமதி றொ. சிவனேசுவரி (எ) நக்கீரன் மகள்**
ஏதிலிகள் சங்க மதியுரைஞர், டென்மார்க்



**பொறிஞர் அந்தமான் கிருஷ்ணமூர்த்தி**
மேனாள் தலைமைப் பொறியாளர்,
அந்தமான் இலட்சத்தீவுகளின்
துறைமுகத் துறை, சென்னை



**திரு. க. சண்முகலிங்கம்**
எழுத்தாளர், டென்மார்க்



**முனைவர் சு. சந்திரசேகரன்**
மேனாள் பேராசிரியர்,
கணிப்பொறியியல் (ம) தமிழ்மொழி,
வடவள்ளி, கோயம்புத்தூர்.



**திரு. செ. தர்சன்**
பாரிசு மாநகரின் சிறந்த செவ்வப்ப
விருதாளர், பிரான்சு

## 23.06.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்



**பொறிஞர் ச. சத்யன்**
மின்பொறியியல் மேற்பார்வையாளர்,
குவைத் தேசிய கன்னெய் தூய்விப்பாலை,
குவைத்



**முனைவர் மெய். சித்ரா**
தலைவர், தமிழ்ப் பண்பாட்டு இயக்கம்,
ஆங்காங்



**மரு. கு. புன்னகை**
பேராசிரியர், மருந்தியல்துறை,
ஸ்ரீ இராமச்சந்திரா மருத்துவக் கல்லூரி (ம)
ஆராய்ச்சி நிறுவனம், போரூர்



**முனைவர் ஜெ. வினாயகம்**
பொருளாளர், தைவான் தமிழ்ச் சங்கம்,
தைவான்



**திரு. ஆ. மணிகண்டன்**
மேலாண்மைப் பங்குதாரர்
கப்பல் சரக்கேற்றம் (ம) வணிக முகமை,

## 30.06.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்



**பேரா. முனைவர் ஆசி. கந்தராஜா**
மேனாள் பேராசிரியர்,
வேளாண்மைத் தொழில்நுட்பத்துறை,
மேற்கு சிட்னி பல்கலைக்கழகம்,
அவுசுதிரேலியா



**முனைவர் சீ. வசந்தி**
மேனாள் தொல்லியல் துணைக் கண்காணிப்பாளர்,
தமிழ்நாடு அரசு, தொல்லியல் துறை,
சென்னை



**பொறிஞர் பத்மப்ரியா இராகவன்**
இயக்குநர், டிவைன் இந்தியா நிறுவனம்,
பாரிசு



**பொறிஞர் பா.வே. இரத்தினம்**
பயிற்றாசிரியர், பெங்களூர்



**பேரா. மரு. போல் யோசெஃப்**
மேனாள் பேராசிரியர், கனடா

## 90 ஆவது அமர்வில் வாழ்த்துரை வழங்கிய அறிஞர்கள்

**முனைவர் பேரா. சொ. சுப்பையா**
மேனாள் துணைவேந்தர்,
அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி



**முனைவர் பேரா. ச.சச்சிதானந்தம்**
இயக்குநர் பன்னாட்டு உயர்(கல்வி) தமிழாய்வு
நிறுவனம், பாரிசு



# அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில...

| | | |
|---|---|---|
| "திருமதி றொ. சிவனேசுவரி (எ) நக்கீரன் மகள்" | | |
| Immigrant medical clinic | – | புலம்பெயர்ந்தோர் மருத்துவகம் |
| Keyboard warrior | – | விசைப்பலகை வீரன் |
| Trophy wife | – | வெற்றித்துணைவி |
| திரு. க. சண்முகலிங்கம் | | |
| peasant society | – | உழுகுடிக் குமுகாயம் |
| post positivism | – | பின் புலனெறியியம் |
| think tank | – | நெறியுரைஞர் குழு |
| திரு. செ. தர்சன் | | |
| Cereal bread | – | கூலச் செவ்வப்பம் |
| corn soft bread | – | சோள மென்னப்பம் |
| Loaf | – | ஊதப்பம் |
| பொறிஞர் கிருஷ்ணமூர்த்தி | | |
| Guide Pin | – | துணைத்தூண் |
| Sounding Chart | – | ஆழ வரைபடம் |
| Slide Roll | – | கணக்கீட்டு உருளி |
| முனைவர் சந்திரசேகரன் | | |
| Argument mining | – | வழக்காடு அகழ்வு |
| Bag of words | – | கிளவித்தொகுப்பு / கிளவிப்பை |
| Feature vector | – | பண்புத் திசையன் |

| | | |
|---|---|---|
| முனைவர் மெய். சித்ரா | | |
| albondigas | – | ஊன் உருண்டை சாறு |
| Habanero | – | மிகக் கார பெருமிளகாய் |
| ceviche | – | மீன் ஊறல் |
| முனைவர் ஜெ. வினாயகம் | | |
| Iodine monoxide (IO) | – | ஊதாய உயிரைடு |
| Iodine trifluoride (IF3) | – | ஊதாய மூவரியம் |
| Iodine heptabromide(IBr7) | – | ஊதாய எழுநெடியம் |
| பொறிஞர் ச. சத்யன் | | |
| Electrical Relay | – | மின் மடைமாற்றி |
| Circuit Breaker | – | மின்சுற்றறுப்பான் |
| Electrical Insulator | – | மின்கடத்தான் |
| மரு. கு. புன்னகை | | |
| Recrudescence | – | நோய் மறுகிளர்ச்சி / நோயறிகுறி மீளல் |
| Relapse | – | நோய் மீளல் |
| Biologicals | – | உயிரிமருந்துகள் |

# அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில...

| | | |
|---|---|---|
| **திரு. ஆ. மணிகண்டன்** | | |
| Echo Sounder | – | எதிரொலி ஆழமானி |
| Navigation Aid | – | கலப்பயண உதவி அமைப்பு |
| Navigation Pad | – | திசைத்தண்டு |
| **பேரா. முனைவர் ஆசி. கந்தராஜா** | | |
| Radicle | – | விதைமுளையம் |
| Hypocotyl | – | வித்திலைக்கீழ்த்தண்டு |
| Cotyledon | – | வித்திலை |
| **பொறிஞர் பத்மப்ரியா இராகவன்** | | |
| Serenova | – | இன்னொலி |
| Lumind | – | அதிதெளிவாற்றல் |
| Cognigen | – | நுண்ணறி பிணையம் |

| | | |
|---|---|---|
| **பேரா. மரு. போல் யோசெஃப்** | | |
| Spinal cord stenosis | – | குறுகிய தண்டுவடம் |
| Thrombosis | – | குருதித் திரட்சியம் |
| Embolism | – | குருதி அழுந்துருளி |
| **முனைவர் சீ. வசந்தி** | | |
| Block excavation | – | சுற்றகழாய்வு |
| Ethno archaeology | – | இனமரபுத் தொல்லியல் |
| Household archaeology | – | மனைசார் தொல்லியல் |
| **பொறிஞர் பா. வே. இரத்தினம்** | | |
| fin (automobile eng.) | – | துரி |
| hydrophilic | – | நீர்பிணை / நீரீர் |
| genetics | – | ஈனியம் |

மொழியே யினமக்கள் முன்னேற நல்ல
வழியாம் அதனை வளர்க்க – பழியாய்த்
தமிழுயரத் தாழ்ந்தான் தமிழன்காண் முன்போல்
தமிழுயர் தானுயர்வதான் தான்.

– மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர்

# செய்தி நறுக்குகள்


சென்னை
மதுரை
கோவை
திருச்சி
திருநெல்வேலி
வேலூர்
தருமபுரி
புது தில்லி
விழுப்புரம்
நாகப்பட்டினம்
http://www.dinamani.com

தினமணி

செவ்வாய்க்கிழமை
27 ஜூன் 2023
சென்னை
14 பக்கங்கள் ரூ.9


## சொற்குவையில் குவிந்த 11 லட்சம் சொற்கள்: அகரமுதலி இயக்ககம் தகவல்

**சென்னை, ஜூன் 26:** தமிழக அரசின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலித் திட்ட இயக்ககம் சார்பில் உருவாக்கப்பட்ட 'சொற்குவை' தளத்தில் பதிவேற்றம் செய்யப்பட்ட சொற்களின் எண்ணிக்கை 11 லட்சத்தைக் கடந்துள்ளது.

குறிப்பாக, கடந்த இரு மாதங்களில் மட்டும் ஒரு லட்சத்துக்கும் மேற்பட்ட சொற்கள் பதிவேற்றப்பட்டுள்ளதாக அகரமுதலித் திட்ட இயக்ககம் தெரிவித்துள்ளது.

சொற்குவை என்பது தமிழக அரசின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலித் திட்ட இயக்கம் உருவாக்கியது ஆகும். தமிழ் மொழியின் அனைத்துச் சொற்களையும் தொகுத்து, அந்தச் சொற்களுக்கு ஆங்கிலத்திலும், தமிழிலும் பொருள்விளக்கம் அளித்து, அந்தச் சொற்கள் தோன்றி வளர்ந்த வேர்ச்சொல் விளக்கத்தையும் வழங்கி, அரிய சொற்களுக்குப் படவிளக்கத்துடன் கூடிய செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலிகளை உருவாக்கி இணையத்திலும் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளது.

இன்றைய கல்விப்புலத்தில் உள்ள 600-க்கும் மேற்பட்ட துறைகளில் புழங்கும் கலைச்சொற்களை யெல்லாம் திரட்டி அவற்றுக்கு நிகரான தமிழ்க் கலைச்சொற்களை வடிவமைத்து, இணைய தளத்தின் பொது வெளியில் வெளியிடுவதும் இதுவரை தமிழில் வெளிவந்துள்ள அகராதிகளில் இடம் பெற்றுள்ள அனைத்துச் சொற்களையும் ஒன்று திரட்டி; தமிழின் சொல்வளத்தை உலகறியச் செய்வதுமே 'சொற்குவைத் திட்டத்தின் நோக்கங்களில் ஒன்று.

இதற்கானSorkuvai.com இணையதளத்தின் வாயிலாக தமிழ் கலைச்சொல் தொடர்பான ஐயங்களைத் தீர்த்துக்கொள்ள வழிவகை செய்யப்பட்டுள்ளது. தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், மாணவர்கள், பொதுமக்கள் உள்ளிட்டோர் உருவாக்கித் தரும் பல்வேறு துறைகளைச் சார்ந்த புதிய தமிழ்க் கலைச்சொற்களை இந்த வலைதளத்தில் பதிவேற்றம் செய்யலாம். அந்தச் சொற்கள் பரிசீலனைக்குப் பின்னர் பதிவேற்றம் செய்யப்பட்டு, பொதுவெளி பயன்பாட்டுக்கு வழங்கப்படுகின்றன.

இந்தத் தளத்தில் பதிவேற்றம் செய்யபடும் சொற்களின் எண்ணிக்கை கடந்த ஏப்.23-ஆம் தேதி 10 லட்சம் என்ற இலக்கை எட்டியது. தொடர்ந்து கடந்த இரு மாத இடைவெளியில் மேலும் ஒரு லட்சம் சொற்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளது. இந்தத் தளத்தில் பதிவேற்றம் செய்யப்பட்ட சொற்களில் எண்ணிக்கை திங்கள்கிழமை 11 லட்சத்தை எட்டியது. தற்போது இந்தத் தளத்தில் 3,830 சொற்கள் உள்ளன என அகரமுதலித் திட்ட இயக்ககம் தெரிவித்துள்ளது.


இந்தியாவில் அதிக படங்களுடன் வெளிவரும் ஒரே மாலை நாளிதழ்

India's No.1 English Evening Daily
EVENING TAMIL NADU

மாலை தமிழகம்
Maalai Tamizhagam
Evening Tamil Daily
www.maalaitamizhagam.com
e-mail: maalaitamizhagam@gmail.com

சென்னை Chennai 14-6-2023 | புதன்கிழமை (வைகாசி 31) | வெளியூர் Out Station 15-6-2023 | Volume - 14 Issue - 67 | பக்கம் Pages 6 | விலை Price ₹.3


## 220 தமிழ் கலைச்சொற்கள் வல்லுனர் குழு ஏற்பு

**கல்பாக்கம், ஜூன் 14-**



தமிழக அரசு தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககத்தின் தமிழ்க் கலைக்கழக 135வது கூட்டம் நேற்று (13ம் தேதி) அகர முதலி இயக்ககத்தில் நடைபெற்றது.

இந்த நிகழ்ச்சிக்கு இயக்ககத்தின் இயக்குனர் கோ.விசயராகவன்தலைமை தாங்கினார். இந்த கூட்டத்தில், அலுவல் சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், கு.பாலசுப்பிரமணியன், அ. மதிவாணன், நா.சு.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். மொழி பெயர்ப்பு உதவிப் பிரிவு அலுவலர் இளவேனில் முல்லை, உலகத் தமிழா ராய்ச்சி நிறுவனத் தமிழ் மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா. சுலோசனா மற்றும் அலு வல்சார் உறுப்பினர்கள் கலந்து கொண்டனர். கூட்டத்தில் 220 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுனர் குழு ஏற்பளித் துள்ளது.

TRINITY GREEN STUDIO
Low cost solutions
- All in one Studio
- Live Coverage
- Multi camera event coverages
For quotes Call: 9566690315

MAKKAL KURAL (Independent National Tamil Daily) 8 பக்கம் விலை ரூ.4.00

மக்கள் 50 குரல்

நடுநிலை நாளேடு

RNI No. 24383/1973 TNPMG(CCR)/WPP-675/21-23

(மலர் 50 ■ சென்னை 27.6.2023 செவ்வாய் மாலை ■ வெளியீடு 28.6.2023 புதன் ■ இதழ் 294)

Regd. No. TN/CC(S)DN/122/21-23

# சொற்குவையில் குவிந்த 11 லட்சம் சொற்கள்: அகரமுதலி இயக்ககம் தகவல்

சென்னை, ஜூன் 27–

தமிழக அரசின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலித் திட்ட இயக்ககம் சார்பில் உருவாக்கப்பட்ட 'சொற்குவை' தளத்தில் பதிவேற்றம் செய்யப்பட்ட சொற்களின் எண்ணிக்கை 11 லட்சத்தைக் கடந்துள்ளது.

குறிப்பாக, கடந்த இரு மாதங்களில் மட்டும் ஒரு லட்சத்துக்கும் மேற்பட்ட சொற்கள் பதிவேற்றப்பட்டுள்ளதாக அகரமுதலித் திட்ட இயக்ககம் தெரிவித்துள்ளது.

சொற்குவை என்பது தமிழக அரசின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலித் திட்ட இயக்கம் உருவாக்கியது ஆகும். தமிழ்மொழியின் அனைத்துச் சொற்களையும் தொகுத்து, அந்தச் சொற்களுக்கு ஆங்கிலத்திலும், தமிழிலும் பொருள்விளக்கம் அளித்து, அந்தச் சொற்கள் தோன்றி வளர்ந்த வேர்ச்சொல் விளக்கத்தையும் வழங்கி, அரிய சொற்களுக்குப் படவிளக்கத்துடன் கூடிய செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலிகளை உருவாக்கி இணையத்திலும் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளது.

இன்றைய கல்விப்புலத்தில் உள்ள 600–க்கும் மேற்பட்ட துறைகளில் புழங்கும் கலைச்சொற்களை எல்லாம் திரட்டி அவற்றுக்கு நிகரான தமிழ்க் கலைச்சொற்களை வடிவமைத்து, இணைய தளத்தின் பொதுவெளியில் வெளியிடுவதும் இதுவரை தமிழில் வெளிவந்துள்ள அகராதிகளில் இடம் பெற்றுள்ள அனைத்துச் சொற்களையும் ஒன்றுதிரட்டி; தமிழின் சொல்வளத்தை உலகறியச் செய்வதுமே 'சொற்குவைத்' திட்டத்தின் நோக்கங்களில் ஒன்று.

இதற்கான இணையதளத்தின் வாயிலாக தமிழ் கலைச்சொல் தொடர்பான சந்தேகங்களைத் தீர்த்துக்கொள்ள வழிவகை செய்யப்பட்டுள்ளது. தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், மாணவர்கள், பொதுமக்கள் உள்ளிட்டோர் உருவாக்கித்தரும் பல்வேறு துறைகளைச் சார்ந்த புதிய தமிழ்க் கலைச்சொற்களை இந்த வலைதளத்தில் பதிவேற்றம் செய்யலாம். அந்தச் சொற்கள் பரிசீலனைக்குப் பின்னர் பதிவேற்றம் செய்யப்பட்டு, பொதுவெளி பயன்பாட்டுக்கு வழங்கப்படுகின்றன.

இந்தத் தளத்தில் பதிவேற்றம் செய்யபடும் சொற்களின் எண்ணிக்கை கடந்த ஏப்ரல் 23–ம் தேதி 10 லட்சம் என்ற இலக்கை எட்டியது. தொடர்ந்து கடந்த இரு மாத இடைவெளியில் மேலும் ஒரு லட்சம் சொற்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளது. இந்தத் தளத்தில் பதிவேற்றம் செய்யப்பட்ட சொற்களில் எண்ணிக்கை நேற்று 11 லட்சத்தை எட்டியது. தற்போது இந்தத் தளத்தில் 3,830 சொற்கள் உள்ளன என அகரமுதலித் திட்ட இயக்ககம் தெரிவித்துள்ளது.

## தமிழ்நாட்டில் யாருக்கும் கொரோனா பாதிப்பு இல்லை

சென்னை, ஜூன் 27–

தமிழ்நாட்டில் நேற்று ஒருவர் கூட கொரோனா தொற்றால் பாதிக்கப்படவில்லை.

சீனாவில் கடந்த 2019–ம் ஆண்டு கொடிய கொரோனா வைரஸ் தொற்று உலகம் முழுவதும் பரவி மக்களை பீதியில் உறைய வைத்தது. கொத்து கொத்தாக மனித உயிர்கள்

மாலை தமிழகம்

முன்னனுப்பப்பட்டது

6 சென்னை 29-6-2023

# 260 கலைச் சொற்கள் வல்லுனர் குழு ஏற்பு



கல்பாக்கம், ஜூன் 29-

தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககத்தின் தமிழ்க் கலைக்கழக 136வது கூட்டம் அகரமுதலி இயக்ககத்தில் கடந்த 27ம் தேதி நடைபெற்றது. இந்த நிகழ்ச்சிக்கு இயக்குனர் முனைவர் கோ. விசயராகவன் கு.பாலசுப்பிரமணியன், அ. மதிவாணன், நா.சு. சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா. சுலோசனா, நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள்

# 220 புதிய கலைச்சொற்கள் அகரமுதலி கூட்டத்தில் ஏற்பு

சென்னை, ஜூன் 15–

தமிழ் வளர்ச்சித் துறையின் செந்தமிழ் சொற்பிறப்பியல் அகரமுதலி திட்ட இயக்ககத்தின் சார்பில் நடந்த தமிழ் கலைக் கழக கூட்டத்தில், 220 கலைச்சொற்கள் ஏற்கப்பட்டு உள்ளன.

சென்னை, செந்தமிழ் சொற்பிறப்பியல் அகர முதலி திட்ட இயக்ககத்தில் நேற்று முன்தினம், தமிழ் கலைக் கழகத்தின், 135வது ஆய்வுக் கூட்டம் நடந்தது. அதன் இயக்குனர் விஜயராகவன் தலைமையில், பலர் பங்கேற்றனர்.

இதில், பல்வேறு துறைகள் சார்ந்த ஆங்கில சொற்களுக்கு இணையாக உருவாக்கப்பட்டுள்ள, 220 தமிழ் கலைச் சொற்களுக்கு ஒப்புதல் அளிக்கப்பட்டது.

ஏற்கப்பட்ட சில கலைச்சொற்கள்

| ஆங்கில சொல் | தமிழ் சொல் |
|---|---|
| Anticorruption bureau | ஊழல் தடுப்பமைப்பு |
| Assessment cell | மதிப்பீட்டுக் குழு |
| Best judgement assessment | நற்கணிப்பு |
| Black lie | தன்னலப் பொய் |
| Red lie | தீதுறுப் பொய் |
| White lie | தீதிலாப் பொய் |
| Blindfolded study | தேரா முடிவு |
| Citizen charter | குடிமக்கள் பட்டயம் |
| Cloud source | வணிகத் தரவல் அமைவு |
| Common law remedy | இயற்றாச் சட்டத் தீர்வழி |
| Consulting firm | கலந்தாய்வு நிறுவனம் |
| Eye liner | அஞ்சனம் |
| Free passage | தடையிலா வழி |
| Macabre | இரக்கமற்ற |
| Inconclusive meeting | முடிவுறாக் கூட்டம் |